

# வைத்திய சாத்திரம்

பதிப்பாசிரியர்

**முனைவர் சு.சௌந்திரபாண்டியன்**

பொதுப் பதிப்பாசிரியர்

**முனைவர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர்,** இ.ஆ.ப.,
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்
தொல்லியல் துறை

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (ம) ஆய்வு மையம்,
சென்னை-5.

2011 - திருவள்ளுவர் ஆண்டு 2042

கோவையில் நடைபெற்ற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டைச் சிறப்பிக்கும் வகையில் தமிழக அரசின் சிறப்பு நிதி உதவியின் மூலம் மறுபதிப்பாக வெளியிடப்படும் நூல்.

# வைத்திய சாத்திரம்


பதிப்பாசிரியர்

**முனைவர் சு.சௌந்திரபாண்டியன்**

பொதுப் பதிப்பாசிரியர்

**முனைவர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர்,** இ.ஆ.ப.,
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்
தொல்லியல் துறை



அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (ம) ஆய்வு மையம்,
சென்னை-5.

2011 - திருவள்ளுவர் ஆண்டு 2042

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Language | : | **Tamil** |
| Title of the Book | : | **VAIDYA SAATHIRAM** |
| Author | : | **Dr. S. Soundarapandian** |
| General Editor | : | **Dr. T.S. Sridhar, I.A.S.,** |
| First Edition | : | 2000 |
| Paper used | : | 80 GSM Maplitho |
| Size of the Book | : | Cr 1 x 4 |
| Printing Points | : | |
| No. of Pages | : | 266 |
| No. of Copies | : | 500 |
| Printer | : | **The Chennai Printers Indl. Coop. Society Ltd.,**<br>6, Pycrofts Road, Triplicane, Chennai-600 005. |
| Binding | : | Straw Board Bindig |
| Price | : | Rs. 85/- |
| Publisher | : | **Government Oriental Manuscripts**<br>**Library and Research Centre,**<br>Chennai - 5. |
| Subject | : | Medicine |

முனைவர் **தி.ஸ்ரீ.ஸ்ரீதர்,இ.ஆ.ப.,**
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்,
தொல்லியல் துறை.

தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஆல்சு சாலை, எழும்பூர்,
சென்னை-600 008.
தொ.பே/நகரி : 91442819
மின்னஞ்சல் : tnarch@tn.nic.in
வலைதளம் : www.tnarch.gov.in

## அணிந்துரை

கோவையில் 2010-ஆம் ஆண்டு சூன் திங்கள் 23 முதல் 27-ஆம் தேதி வரை நடைபெற்ற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு இனிதே நடைபெற்றதையொட்டி தமிழக கலை, வரலாறு, பண்பாடு, தொழில் நுட்பம் மற்றும் இலக்கியப் பெருமைகளை உலகிற்குப் பறைசாற்றும் நோக்கத்தில் பன்னிரெண்டு நூற்களை முதற் பதிப்பாகவும் ஏழு நூற்களை மறுபதிப்பாகவும் தொல்லியல் துறையின் மூலம் வெளியிட தமிழக அரசு அனுமதி அளித்தது. மறுபதிப்பாக வெளியிட அனுமதி அளிக்கப்பட்ட ஏழு நூல்களுள் ஒன்று வைத்திய சாத்திரம்.

முனைவர். சு. சௌந்தரபாண்டியன் அவர்களை பதிப்பாசிரியராகக் கொண்டு அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையத்தால் வெளியிடப்பட்ட நூல் இது. இந்நூல் பல்வேறு வகையான நோய்களை எளிய வீட்டு மருந்துகளால் குணப்படுத்த முடியும் என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு.

அரிய இந்நூலை மறுபதிப்பாக வெளியிட அனுமதியையும் நிதியுதவியையும் வழங்கிய தமிழக அரசுக்கும் **மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும், மாண்புமிகு பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் அவர்களுக்கும், சுற்றுலா மற்றும் பண்பாட்டுத் துறைச் செயலர் அவர்களுக்கும்** தொல்லியல் துறையின் தலைவர் என்ற முறையில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை மிகச் சிறப்பாக வெளிக் கொண்டு வர பன்முகமாக பணிபுரிந்த அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மைய நூலகர் மற்றும் காப்பாட்சியர் (பொ) இர.சந்திரமோகன் அவர்களுக்கும் தமிழ்ப்புலவர் திரு. ச.தியாகராசன் அவர்களுக்கும், தொல்லியல் துறையின் உதவி இயக்குநர் (பொ) திரு. இலா.எபரியான்ஸ், கண்காணிப்பாளர் திருமதி. ஞா.லீலா தேவகுமாரி அவர்களுக்கும் எனது பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அரிய இந்நூலை தமிழக மக்கள் அனைவரும் ஏற்று பயனடைய வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இடம் : சென்னை
நாள் :

**(தி.ஸ்ரீ.ஸ்ரீதர்)**
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்

# வைத்திய சாத்திரம்

## பதிப்புரை

வைத்தியச் சாத்திரம் என்ற இந்நூலில் மொத்தம் மூன்று சுவடிகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

முதற்சுவடி, ஆர். எண் 1904 மற்றும் ஆர். எண். 8095 ஆகிய இரு தாட் சுவடிகளிலிருந்து பதிப்பிக்கப் பெறுகிறது.

இச்சுவடி, போடுவார்பட்டி ஆச்சாரி ஒருவர் வைத்திருந்த சுவடியின் படியாகும். போடுவார்பட்டியைச் சேர்ந்த ஆச்சாரி அவர்கள் 1929இல் இச்சுவடியை எழுதியுள்ளார் எனத் தெரிகிறது.

1929இல் எழுதினாலும், அவருக்கு முன்பு எத்தனையோ நூற்றாண்டுகளாகத் தமிழர்கள் அனுபவத்தில் கண்டவற்றையும் போடுவார்பட்டி ஆச்சாரி அவர்கள் தொகுத்திருக்க வேண்டும்.

கைகண்ட நல்ல மருத்துவத்தையே, பொதுவாக, மருத்துவர்கள், ''நமக்குப் பயன்படும்'' என்ற கருத்தில் பனையோலைகளில் குறித்து வைப்பர்.

வைத்தியச் சாத்திரம் எனும் இவ்வனுபவ மருத்துவச் சுவடியைக் கண்ணுற்று, ''இது கட்டாயம் பதிப்பிக்கப்படவேண்டும்'' என்ற கருத்தை நல்கியவர் மதுரை ஏ. என். அனுமந்தன் ஆச்சாரி அவர்கள் ஆவார்கள்.

மதுரை ஏ. என். அனுமந்தன் ஆச்சாரி அவர்கள், அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்கு நஞ்சுநூல் முதலிய தலைசிறந்த தமிழ் மருத்துவ நூற்களை நன்கொடையாக அளித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நூலிலும், பொதுவாகத் தமிழ் மருத்துவ நூற்களிலும் குளிகை என்று வருவது, மாத்திரையைக் குறிப்பதாகும்; குளிகை என்ற தமிழ்ச் சொல்லுக்குச் சிறிய அளவு என்பது நேர் பொருள். இப்பொருளிலேயே மாத்திரையைக் குறித்தது.

சித்தமருத்துவ நூற்களை ஆயும்போது பலப்பல உண்மைகள் தெரிய வருகின்றன.

எடுத்துக்காட்டாகச், சிலவகை மருந்துப் பொருட்கள் மட்டும் சேர்ந்து சேர்ந்து பயன்பாட்டுக்கு வரும்!

எடுத்துக்காட்டாகச் சுக்கு, மிளகு, திப்பிலியைச் சுட்டலாம்!

பெரும்பாலும், இந்த மூன்று பொருட்களும் சேர்ந்துதான் வேறு ஒரு பொருளைத் தயாரிக்க உதவுகிறது!

இது இயற்கையின் ஆற்றல்!

இதனைக் கண்ட தமிழரின் திறமே திறம்!

இந்த மூன்று பொருட்களின் சேர்க்கையில் ஈடுபட்ட – மெய் மறந்த தமிழ்ப்புலவர் நல்லாதனார், திரிகடுகம் என்ற நூலையே இயற்றினார்! இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கைச் சேர்ந்தது.

இவ்வாறு, என்னென்ன பொருட்கள் சேர்க்கையாக வருகின்றன என்று தனிப்பட்டியல் தயாரித்து ஆயலாம்.

மருத்துவ நூலைத் தொட்டு நிற்கும் இந்நேரத்தில் நாம் ஒன்றைக் கருதலாம்.

அஃதாவது, தமிழர் வாழ்வும் சித்த மருத்துவமும் பிரிக்க முடியாதவை என்பதே அது!

இத்தத்துவத்தை எவரும் மறுக்க இயலாது!

இத்தத்துவத்தை நம் ஆய்வுகளில் மறக்கவும் கூடாது!

எடுத்துக்காட்டாக, வடமொழியில் எழுதப்பட்டுள்ள அதர்வண வேதத்தில் மூலிகைகள் பற்றிய குறிப்புகள் நிறைய வருகின்றன!

இப்படி வருவதற்கு, மேலே சுட்டிய தத்துவப்படி, தமிழர் வாழ்வே காரணம் என்பதை நாம் கண்டுகொள்ள வேண்டும்!

கண்டுகொண்டு, அவ்வழியில் ஆய்வுகளைச் செலுத்த வேண்டும்!

அதர்வண வேதத்து மூலிகை ஒன்றைக் குறிப்பிட்டால், மேலைக் கருத்து தெளிவாகும்!

தர்ப்பையை ஒரு மூலிகையாக அதர்வண வேதம் குறிக்கிறது! இது உண்மையே! தர்ப்பைப்புல்லும் ஒரு மூலிகையே!

இத்தர்ப்பைப்புல் தமிழ்நாட்டு மண்ணில் விளைந்ததுதானே!

தர்ப்பைப்புல்லை வேகவைத்து, அதிலிருந்து சாறு இறக்கி மருத்துவம் கண்டவன் தமிழன் அல்லவா? இம்முறை இன்றும் தமிழ் மருத்துவத்தில் உள்ளதே!

பொதுவாகத் தமிழர் அறிவில் நம்பிக்கை அல்லது மூட நம்பிக்கை சிறிது கலந்தே வரும்!

மூடநம்பிக்கை உள்ளது என்று அறிவு மொத்தத்தையும் ஒதுக்கக் கூடாது!

எடுத்துக்காட்டாக, நமது இந்நூலில்' ஓரிடத்தில் (எண் 37) எருக்கிலை வேருக்குக் கோழியைப் பலிகொடுக்கவேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது. இது ஒரு நம்பிக்கைதான்! இது இருக்கிறது என்பதற்கு, மருத்துவம் முழுவதையுமே நாம் தள்ளிவிட முடியாது!

தமிழர் மருத்துவத்தில் நம்பிக்கைகள் என்ற தலைப்பில் இதுவரை எவரும் ஆய்வு செய்யவில்லை; பலர் இதில் முனையலாம்.

தமிழ் மருத்துவ நூற்களில் உள்ள மருத்தின் பெருமைகள் ஒருபுறமிருக்க, மருந்தைச் சேர்க்கும் முறைகளில் தமிழர்கள் எவ்வளவு நுணுக்கமாக இயற்கையை உற்று நோக்கியுள்ளனர் என்பதும் கருதத்தக்கதே!

இந்த நூலில், ஓரிடத்தில் (எண் 43) ஊஞ்சமரத்துப் பட்டையையும் தழையையும் எடுக்கவேண்டும் என்று சொல்லவந்தவர். இவ்வாறு நுணுக்கம் கூறுகிறார். ''ஊஞ்சமரத்தில் கரிக்குருவி யிருந்த கொம்பு அசைவு நிற்குமுன் அப்பட்டையுந் தழையும் சேர்த்து'' என்கிறார்!

அஃதாவது, கரிக்குருவி ஊஞ்சல் மரத்தில் அமரவேண்டும்! (வேறு குருவி அமர்ந்தால் ஆகாது); பிறகு அது, மரத்தின் பட்டையை எடுக்க வரும் மருத்துவரைக் கண்டு, ''இவர் நம் பட்டையையும் கழற்றிவிடுவார்!'' என்று பயந்து அக்குருவி ஓடவேண்டும்! அப்போது மரக்கிளை அசையுமல்லவா? அந்த அசைவு நிற்பதற்கு முன், மருத்துவர் அவருக்குத் தேவையானதை எடுத்துக்கொள்ள வேண்டும்; அசைவு நின்று விட்டால், மருத்துவக் குணம் போய் விடும்!

இதைத்தான் நம்நூல் கூறுகிறது! ஒரு கவிதையா? மருத்து செய் முறையா? திகைப்பாக உள்ளது!

இவ்வாறு நவின்றுள்ளதில் உள்ள சொற்சுவை ஒருபுறம் இருக்கட்டும்! எவ்வளவு நுணுக்கமாக இயற்கையை நோக்கியுள்ளார்கள் தமிழர்கள் என்பதே நாம் எண்ண வேண்டிய கருத்து!

இங்கு இன்னொன்றையும் ஆயலாம்.

''பட்டையைக் கழட்டிடுவேன்!'' என்ற வழக்கு உள்ளதல்லவா? இது, மருத்துவம் தந்த பழமொழி!

மரத்தின் பட்டையை மருத்துவத்திற்குத்தான் எடுப்பர்; வேறு எதற்கும் பெரும்பாலும் எடுப்பதில்லை!

எனவே, மேற்பழமொழிக்குத் தமிழர் மருத்துவமே காரணமாக இருந்துள்ளது!

மருத்துவ நூற்கள் தமிழ்மொழிக்குத் தந்த நன்கொடை என்ற தலைப்பில் இதுவரை எவரும் ஆயவில்லை! இவ்வாய்வை மேற்கொள்வது பயனுடைத்தே.

நம் தமிழ் மருத்துவச் சுவடிகளில் உள்ள பிறிதொரு குறிப்பிடத்தக்க பண்பு யாதெனில், இவற்றில் பெண்வசியம், வயல் விளையாமல் இருக்க, சண்டையில் வெல்ல, கோழிச் சண்டையில் வெல்ல, வழக்கு வெல்ல, பிறர்கண்ணில் படாமல் மறைந்து இருக்க, முதலியவற்றுக்கு எல்லாம் மருந்து கூறியிருப்பதே!

இப்படிப்பட்ட செயல்கள் விரும்பத்தக்கன அல்ல!

ஏதோ ஒரு காலகட்டத்தில், இம்மாதிரியான செயல்களுக்கு மதிப்பு இருந்துள்ளது.

அதர்வண வேதத்தில் பில்லிசூனியம் குறிக்கப்பட்டுள்ளதால், கி.மு. 2500ஐ ஒட்டிய காலகட்டத்திலேயே, தமிழில், மேலே குறிப்பிடப்பட்ட 'செய்வினைகள்' பழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். தமிழில் இருந்த பழக்கங்களே வடமொழியில் குறிக்கப்பட்டு அதர்வணவேதத்தில் ஏற்றப்பட்டன.

இம்மாதிரியான மந்திரம் தொடர்பான தமிழர் கருத்துகளை நன்கு ஆயவேண்டும். இவ்வாய்வு இன்னும் மேற்கொள்ளப்படவில்லை.

தற்போதைய சமுதாயத்திற்கு, மந்திரம் தொடர்பான கருத்துகள், பில்லிசூனியக் கருத்துகள் தேவையற்றவை யாதலால், நமது இந்நூலில், சுவடியில் உள்ள பில்லிசூனியக் கருத்துக்கள் பதிப்பிக்கப்படவில்லை.

பொதுவாகச், சித்த மருத்துவ நூற்களிற் கூறப்படும் மருந்துகளைச் சோதனை செய்த பிறகே பயன்பாட்டுக்குக் கொண்டுவர வேண்டும்!

சித்த மருத்துவ அறிஞர்கள் இதற்கு ஒரு வழியை வகுத்து, இன்னின்ன மருந்துகள் சோதனை செய்யப்பட்டவை; இன்னார் தரும் மருந்துகளில் இவை மட்டுமே சோதனை செய்யப்பட்டவை என்று முத்திரை இடவேண்டும்!

இல்லையேல், எவரும் 'சித்த மருந்து' என்று எதையும் கொடுக்க, அதை வாங்கி அருந்தி அவதியுற நேரிடும்!

சித்த மருத்துவ நூற்களில் எத்தனையோ நுணுக்கங்கள் கூறப் படுகின்றன. ஒவ்வொன்றையும், 'அந்தக்காலத்தில் சொன்னது' என்று விட்டுவிடாமல், ஆய்வு செய்து இளைய தலைமுறைக்கு அளிக்க வேண்டும்!

எடுத்துக்காட்டாக, வேர்ப்பொருளைக் குறிக்கும்போது, சிலவிடங்களில், 'வடக்கே போகிறவேரைக் கொண்டுவந்து' என்று குறிக்கின்றனர்; பிற திசை வேர்களைவிட, வடக்கே போகிற வேருக்கு என்ன சிறப்பு என்று ஆய்வு நடத்தி, உலகுக்குத் தமிழர் அறிவுநுணுக்கத்தை வெளிப்படுத்த வேண்டும்!

மருத்துவம் சாராத சில கருத்துக்களும் இந்தச் சுவடியில் உள.

எடுத்துக்காட்டாக, "பாய்கிற மாட்டைப் பிடிக்க" என்ற தலைப்பில், அவ்ரை இலையைக் கசக்கி, மாடு பிடித்து வரும் கயிற்றில் தடவிப் பிடித்தால், மாடு பாயாது சும்மா வரும்" என்று நமது இந்த நூலில் உளது!

மருத்துவத்திற்கு இது தேவைப்படாததலால் இதுபோன்ற ஒரு சில கருத்துகள் பதிப்பிக்கப்படவில்லை.

ஆயினும், இதுபோன்ற கருத்துகள், சமுதாய ஆய்விற்குத் தேவையானவையே!

எனவே, மேலாய்வோர், மருத்துவச் சுவடிகளை நன்கு ஆய வேண்டும்.

தமிழர் மருத்துவ ஆய்வு என்பது நோயைத் தீர்ப்பதற்காக மட்டும் பயன்படுவது அல்ல! தமிழ் நாகரிகத்தைக் கண்டறியவும் பயன்படும்!

தமிழ் மருத்துவத்தில் கூறப்படுபவையே, செய்வினை, பெண் வசியம், தாயத்து முதலியன. இக்கருத்துகள் யாவும் தமிழ்

மக்களிடையே ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வருபவையே; இன்றும் அருகிக் காணப்படுபவையே. இவற்றின் தோற்றம், தமிழ் மண்ணில் ஏற்பட்டதே! இவற்றில் தீமைகள் இருக்கின்றன என்பது வேறு செய்தி. தமிழகத்தே கால்கொண்ட பில்லி, சூனியம் முதலியன யாவும் அதர்வண வேதத்தில் கூறப் பட்டுள்ளன!

அதர்வணவேதம் வடமொழியில் இருந்தாலும், அதிற் காணப் படும் கருத்துகளுக்குத் தமிழ்நிலமே மூலம் எனலாம்.

தமிழ் மக்களிடையே செய்வினை வைத்தல் போன்ற செயல்கள் 5000 ஆண்டுகளுக்கு முன்பே இருந்தன என்ற கருத்தும் இதனால் தோன்றுகிறது.

செய்வினை வைத்தல் போன்றவைகளுக்கு நல்ல தொழில் நுட்பம் தேவைப்படும் என்பதை நாம் மறத்தல் ஆகாது; தொழில் நுட்பத்தில் அவ்வளவு தொன்மைக் காலத்தில் சிறந்திருந்த சமுதாயம் தமிழ்ச் சமுதாயமே எனல் வேண்டும்.

தொழில் நுட்பம் மட்டுமல்ல, காலம் பற்றிய அறிவு, வினை பொருள் நுணுக்கங்கள் என்று பலதுறை அறிவின் மேன்மை சூனியத் தொழில்களில் உள.

இப்படிப்பட்ட அறிவு நுணுக்கங்களை வடமொழிவாணர்கள் எங்கிருந்தும் பெற்றிருக்க வாய்ப்பில்லை! தமிழர்களிடமிருந்தே பெற்றிருக்கவேண்டும்!

அதர்வணவேதம் கூறும் மருத்துவம், மூலிகைகள், தாயத்துகள் (amulet) முதலியன ஆரியர்களுடையவை என்று சொன்னால், அவற்றை ஒட்டி எழுந்த இன்னும் எத்தனையோ அறிவுகள் யாவும் ஆரியரால் தமிழர் பெற்றவை என்று ஒத்துக்கொள்வதாக ஆகிவிடும்! இதனைத் தமிழ் ஆய்வுலகம் நன்கு கவனத்தில் இருத்த வேண்டும்!

விசுவாமித்திரசுவாமி வாக்கியம் என்ற மருத்துவ நூலில் உள்ளதைப் போலவே, நல்ல அருந்தமிழ்ச்சொல் ஆட்சிகளையும் இந்த நூலில் நுகர்கிறோம்!

வற்றக் காய்ச்சி என்ற பொருளில், 'சுறுக்கிட்டு' என்ற சொல் எழுதப்படுகிறது!

இதுபோன்ற மறைந்து போன தமிழ்ச் சொல்லாட்சிகளை நாம் கண்ணுற வாய்ப்பளிக்கிறது? இம்மருத்துவச் சுவடி. அதற்காக வாவது, இது போன்ற நூற்களை நாம் பதிப்பிக்கத்தானே வேண்டும்?

இந்நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ள முதலாம் நூலின் ஈற்றில் மறைச்சொல் விளக்கப் (பரிபாஷை விளக்கம்) பட்டியல் ஒன்றும் உள்ளது. இது மிகவும் பயனுள்ளதாகும். இதன் மூலம், உலோகம் என்ற சொல்லுக்கே இரும்பு என்றொரு பொருள் இருப்பது புலனாகிறது!

வைத்தியச் சாத்திரம் எனும் இந்நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ள இரண்டாம் நூல், அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகச் சுவடி எண். ஆர். 1905 மற்றும் ஆர். 8096 ஆகியவற்றிலிருந்து பதிப்பிக்கப் பட்டுளது. இந்நூல் சிலரது மருத்துவ அனுபவக் குறிப்புகளாம். கோயமுத்தூர்ச்சாமியார், முத்துசாமி நாயக்கர், ஏ. கே. விசுவநாதம் மற்றும் சிலரின் அனுபவக்குறிப்புகளே இந்நூல்.

இவ்விரண்டாம் சுவடி 1937இல் எழுதப்பட்ட தாட் சுவடி ஆகும்.

பழைய மருத்துவச் சுவடிகளில் உள்ள தமிழ்நடை தனித்து ஆயத்தக்கது.

பழந்தமிழ் மக்களின் தமிழ் உரைநடை, அவர்களின் அப்பாவித்தனமான' நெஞ்சத்தைக் காட்டவல்லது! வேறுவகையாகச் சொன்னால், பழந்தமிழ் மக்களின் தூய இதயத்தைப் பழந்தமிழ் நடையிலேயே காணமுடியும்!

ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதனை இங்கு விளக்கலாம்.

வைத்தியச் சாத்திரம் என்ற இந்த நூலில் இரண்டாவதாகப் பதிப்பிக்கப்பட்டுள்ள சுவடியில், "நரையாத தலைமயிரைச் சியக்காயரைத்ததில் போட்டு" என்று ஓரிடத்தில் உரைநடை வருகிறது (மருந்து முறை 13).

''சீயக்காய் அரைத்து, அதில் நரையாத தலைமயிரைப் போட்டு'' என்பது தெளிவான உரை நடை; இந்தக்கால நமது உரை நடை.

''எவரும் பிழைகண்டுவிடக் கூடாது'' என்ற விழிப்புணர்வு நமது மேலை நடையில் உள்ளது! ஆனால், எவரையும் எதிரியாக நினையாது, மாசற்ற முறையில் சிந்தித்து, உள்ளத்தில் உள்ளதை உள்ளபடியே காட்டியது பழைய மக்களின் உரை நடை!

உரைநடை சமுதாய உளப்பாங்கைக் காட்டும் அதிசயத்தைப் பார்த்தீர்களா?

தமிழ் மருத்துவம் கூறும் மருந்துகள் நோய்களைக் குணமாக்குகின்றனவோ இல்லையோ, மருந்துகள் தயாரிக்கும் முறைகள் நமக்கு மெய்ச்சிலிர்ப்பை ஏற்படுத்துகின்றன! வியப்பை அளிக்கின்றன!

எடுத்துக்காட்டாகத், தலைமயிர் கரைவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? தலைமயிர் எதிலாவது கரையும் என்றால் நீங்கள் நம்புவீர்களா? மாட்டீர்கள்! ஆனால் தமிழ் மருத்துவம் தலைமயிரைக் கரைக்கிறது!

ஆம்! வண்ணாப்பட்டி சா. இராமசாமி ஆச்சாரி தலைமயிரைக் கரைத்துக் காட்டுகிறார்!

''சீயக்காயை அரைத்து, அதில் தலைமயிரைப் போட்டுக் கசக்கி எடுத்துக்கொள்ளவேண்டும்; பிறகு அதை நன்றாக நீரில் கழுவ வேண்டும். கழுவியதை உலர்த்த வேண்டும். உலர்த்தியதை நல்லெண்ணையில் இட்டுக் காய்ச்சினால், தலைமயிர் கரையும்!''

சித்தமருத்துவ நிறுவனங்கள் இதைச் செய்து மக்களுக்கு அறிவிக்கவேண்டும்!

இங்கு பதிப்புப் பெறும் இந்த இரண்டாவது சுவடியில், ஒவ்வொரு மருந்தும் இன்னார் பக்குவம் என்ற குறிப்பு உள்ளது சிறப்பாகும்!

சித்தவைத்தியம் என்று நாம் பொதுவாகச் சொன்னாலும், ஒவ்வொரு மருத்துவரும் ஒவ்வொரு வகையில் மருந்துகளை முடிப்பர்; அந்தந்த மருத்துவரின் அறிவுக்கு ஏற்ப, மருந்தின் திறனும் மாறுபடும். இதைச் சித்தமருத்துவத்தில் நன்கு நாம் விளங்கிக்கொள்ளவேண்டும்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் அறிந்த மருத்துவமே சித்தமருத்துவம் எனப்படுகிறது.

காலந்தோறும் எழுந்த அறிவுகளும், தமிழ் மருத்துவர்களால் இணைக்கப்பெற்று, மொத்தத்தில் சித்தமருத்துவம் என்று இன்று அழைக்கப்படுகிறது.

சித்தமருத்துவத்தில், ஆங்கில மருந்திற்குத் துளியும் இடமில்லை என்பதை நாம் முதற்கண் ஒரு கோட்பாடாகக் கொள்ளவேண்டும்!

ஆங்கில மருந்துகளையும் சேர்த்துக்கொண்டு சில புதிய மருந்துகள் உருவாகலாம்; ஆனால் அப்போது சித்தமருத்துவம் என்ற தன்மையை-நிலையை நாம் கோரக்கூடாது.

சித்தமருத்துவ நூற்களில் மருந்து முறைகள் மட்டும்தான் கூறப்பட்டிருக்கும் எனப் பலரும் நினைக்கின்றனர்! இது தவறு!

தமிழர்தம் சித்த மருத்துவ நூற்களில் வாழ்க்கை முறையே உளது! எத்தனையோ தொழில் நுணுக்கங்கள் உள! எத்தனையோ வித்தைகள் உள்ளன.

எடுத்துக்காட்டாக, இந்தச் சுவடியில், கண்ணாடியை வாயில் போட்டு மெல்வதற்கு உத்தி கூறப்பட்டுள்ளது! என்ன மாயம் அது?

இஞ்சியை வாயில் போட்டு மென்று கொண்ட பிறகு மெல்லலாமாம்! செய்துபார்த்தால், உண்மை தெரியவரும்!

இன்னொரு தொழில் நுட்பத்தையும் இந்தச்சுவடி நுவலுகிறது.

அஃதாவது, கண்ணாடிப் புட்டியில் ஓட்டை போட வேண்டுமா? புட்டியைத் திருப்பிப் பிடித்துக் கொண்டு, பின் பக்கத்தில், இஞ்சிச் சாற்றைச் சிறிதுவிட்டு, அந்த இடத்தில் தட்டினால், தமர் விழுமாம்!

ஆனால், இதுபோன்ற தொழில் நுட்பங்கள், தமிழ்மருத்துவம் என்ற தலைப்பில் தேவையில்லாதால், இங்கு பதிப்புப்பெற வில்லை.

இந்தச் சுவடியில், ஓரிடத்தில், இன்னின்ன வியாதிகளுக்கு மருந்து என்று குறிக்கும் போது, 'இரகசியம்' என்றும் குறித் துளர்!

இதுதான் கண்டிக்கத் தக்கது!

'இரகசியம்' என்று மூடி மூடி வைத்ததால்தான், தமிழ் மருத்து வத்திற்கு இன்று உலகில் இடமில்லாமல் போய்விட்டது!

இரகசியம் என்று மூடி மூடி வைத்ததால்தான், தமிழ் இளைய சமுதாயம் தமிழ் மருத்துவத்தை ஒதுக்கும் நிலை ஏற்பட்டது!

'இரகசியம்' என்று ஒதுக்கி வைத்ததற்கு நமது இந்தச் சுவடியே ஆதாரம்.

தொழில் நுட்பங்களைத் தமிழ்மக்கள் அறியுமாறு செய்ய வேண்டும்!

மேனாட்டில் ஏற்பட்ட மின்சாரத் தொழில் நுட்பங்களையும், வேதியியல் தொழில் நுட்பங்களையும் அச்சிட்ட மேனாட்டுப் புத்தகங்கள் மூலமாக இங்குள்ள இந்தியர்கள் படித்தே அறிந்து கொள்கின்றனர்! 'இரகசியம்' என்று அந்த மேனாட்டார் மூடி வைத்தார்களா? மூடி வைத்திருந்தால், அவர்களுக்கு இவ்வளவு மதிப்பு வந்திருக்காது! இந்த இரகசியத்தை உணர்ந்து செயல் படுவதால், மேனாட்டாருக்கு உலகில் மதிப்பு ஏற்படுகிறது; இந்தியர்களைப் 'பாம்பாட்டிகள்' என்று தாழ்த்தும் நிலை ஏற்படுகிறது!

இந்நூலில் பதிப்பிக்கப்படும் மூன்றாவது தாட்சுவடிகள் ஆர். 1906, ஆர். 8097 ஆகிய இரு எண்களில் நூலகத்தில் இருப்பவைகளாம்.

இம்மூன்றாவது தாட்சுவடி, 1928 இல் எழுதப்பட்டது; பழனி யருகே உள்ள புளியம்பட்டியைச் சேர்ந்த பெ. பழனிச்சாமிக் கவுண்டர் என்பவரது குறிப்புகளே இவை.

இம்மருத்துவக் குறிப்புகள் பல இவருக்கு முன்பே வழிவழி யாக வந்தவைகள் என்றும், ஒரு சில இவரது சொந்த அனுபவத்தில் கூறப்பட்டனவாகவும் கொள்ளலாம்.

இப்புளியம்பட்டியில் அந்நாளில் சித்த மருத்துவர்கள் பலர் வாழ்ந்து அரிய மருந்துகளைப் படைத்தளித்துள்ளனர். இதன் காரணமாகவே இன்றும் பழனி, சித்த மருத்துவ நூற்களுக்கு இடமாக விளங்குகிறது எனவும் மதிப்பிடலாம்.

பொதுவாகச் சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளிலும், அச்சு நூற்களிலும் தலைதூக்கியுள்ள எழுத்துப் பிழைகள் மிகுதி.

மருந்துப் பொருட்களை ஒவ்வொரு மருத்துவரும் ஒவ்வொரு விதமாக உச்சரிப்பதும், இத்தகைய எழுத்துப் பிழைகள் ஏற்படக் காரணமாக அமைந்தது.

'நறுவிளா' என்பதை, உச்சரித்து உச்சரித்து, இறுதியில் அதை 'நரிவிளா' என்று ஆக்கிவிட்டனர்; சில சுவடிகளில் நரிவிளா என்றே உள்ளதை இங்கு குறிப்பிடலாம்.

'சிறுபூளை' என்பதை அவசரமாகக் கேட்டோ, அவசரமாக உச்சரித்தோ, 'சிறுபூனை' யாக்கிவிட்டனர்; பழைய அச்சு நூற்களில் 'சிறுபூனை' என்றே அச்சிட்டிருக்கக் காண்கிறோம்!

தமிழ்ச் சித்த மருத்துவம் நுவலும் மருந்துப் பொருட்களின் பட்டியலே ஒரு பெட்டகம்! படிக்கப் படிக்கத் தெவிட்டாத தேன்!

மருந்துப் பொருட்களின் தன்மையை நுணுகி ஆய்ந்தால், தமிழகத்தின் வெம்மை தண்மை நன்கு பளிச்சிடக் காணலாம்!

குளிர்காலத்தே செழிக்கும் மருந்துப் பொருட்கள், கோடையில் தாக்குப் பிடித்து விளையும் மருந்துப் பொருட்கள், என்று நம் மருந்துப் பொருட்களைப் பகுத்து ஆயலாம். தமிழகத்தின் நில அமைப்பு, வெப்ப அமைப்பு இவற்றில் ஏற்பட்ட அல்லது ஏற்படாத மாற்றம் பற்றி ஓரளவுக்கு அறிய இத்தகு ஆய்வு துணை செய்யலாம்.

தமிழ் மருத்துவ ஆய்வில், முன்பே உரைத்தது போல, 'பரிபாஷை' என்று ஒன்று மயக்கும்!

இப் 'பரிபாஷை' தோன்றுவதற்குப் பல காரணங்கள் இருந்தன.

அவற்றில் ஒன்று, செய்யுள் வடிவு ஆகும்!

செய்யுளில் சீர்களை அமைத்துப் பாடியதால், பழம் மருத்துவர்கள், சீர்களுக்கு ஏற்ப, சில பொருள்களின் பெயர்களையும் மாற்றி உரைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது!

எடுத்துக்காட்டாக, 'ஆதியான்' என்று பாட்டைத் தொடங்கியிருப்பார்; அடுத்து, ஒரு பொருளைக் கூற வேண்டும்; ஆதியானுக்கு எதுகையாகவும் அமைய வேண்டும்; என்ன செய்வார்? பேசாமல், 'சோதியான்' என்று அந்த மருந்துப் பொருளுக்கு ஒரு பெயரை இவரே கட்டிவிடுவார்! 'சோதியான்' என்றால் என்ன? என்று, பின்னே வருபவர்கள் மண்டையை உடைத்துக் கொள்வர்! பரிபாஷையாகப் பல பெயர்கள் இவ்வகையில் வந்திருக்கலாம்.

சித்த மருத்துவத்தில் பல நுணுக்கங்கள் உள்ளன என்பது முன்னும் உரைக்கப்பட்டது.

இங்கு ஒரு நுணுக்கத்தைத் தொட்டுக் காட்டலாம்.

துணிகளில் செய்யும் மருந்துமுறையே அது!

நக்கீரர், தம் நெடுநல்வாடையில், "மெழுகு செய் படம்"[1] என்று ஒரு துணி வேலைப்பாட்டை உணர்த்தினார்.

துணியில் மெழுகைப் பூசுவதே அவ்வேலை!

இங்கே பதிப்புப் பெறும் நமது இந்தச் சுவடியில், அதனோடு ஒப்பிடத்தக்க ஒரு மருத்துமுறை கூறப்பட்டுள்ளது!

இங்கே, கந்தகம் வேப்பெண்ணை ஆகிய இரு பொருட்களையும் ஒரு துணியில் தடவும் ஒரு மருந்து முறை நவிலப்படுகிறது!

எனவே, இவர்கள் கூறும் மருந்து பலிக்கிறதா இல்லையா என்பது ஒருபுறம் இருக்கட்டும், துணியில் தடவுபொருட்களைப் பூசிப் புரியும் ஒரு திறமான தொழில் நுட்பத்தை 1000 ஆண்டு களுக்கு, 2000 ஆண்டுகளுக்கு முந்தைய தமிழர்கள் பெற்றிருந் தார்கள் என்பதே நாம் இங்கு நினைக்க வேண்டியது! உலகுக்கு அறிவிக்க வேண்டிய செய்தியும் இதுவே!

சித்த மருத்துவம் வேறு கோணத்திலும் ஆயப்படவேண்டும்!

அதுவே வடமொழிக் கோணம்!

அஃதாவது, தமிழ் மருந்துப் பெயர்களை, வடசொற்கள் போல எழுதிக் கொண்டு, தமிழ் மூலத்தைச் சிதைத்துள்ளனர் என்பது நாம் அறியவேண்டிய உண்மை ஆகும்!

எடுத்துக்காட்டாக, 'கோஷ்டம்' என்றொரு மருந்துப் பொருள் உள்ளது; இது தமிழர் கண்ட, தமிழ் மருந்தே! இதன் உண்மைப் பெயர், 'கோட்டம்' என்பதே. நமது இந்தச் சுவடியில் 'கோட்டம்' (மருந்து எண் 17) என்றே வந்துளது! இதைக் 'கோஷ்டம்' என்று மாற்றி எழுதிக் கொண்டு, நமது கருத்தையே திசைதிருப்பி விட்டனர்!

நோய்களும் பருவங்களும் என்பது ஓர் ஆய்வுத் தலைப்பு; இத்தலைப்பில் ஆய்வுகள் நடைபெறவில்லை.

பருவ மாற்றத்திற்கு ஏற்ப, பல நோய்கள் வருகின்றன.

கோடைக்காலம் வந்தால், உடலில் கட்டிகள் தோன்று கின்றன; அம்மைநோய் வருகிறது. உண்டா இல்லையா?

பருவ மாற்றத்திற்கும் உடல்நோய்க்கும் உள்ள தொடர்பு இதனால் விளங்குகிறது.

நமது இந்தச் சுவடியில் அமாவாசையில் இருமல் வருகிறது என்ற உண்மை கூறப்பட்டுள்ளது! இனி வரும் அமாவாசை நாட்களில் இந்த உண்மையைச் சோதித்துப் பாருங்கள்! தமிழர் மேன்மை விளங்கும்!

இவ்வண்ணம், ஆய்வுக் கருவூலமாக விளங்கும் வைத்தியச் சாத்திரம் எனும் இந்நூல், தமிழ்த்தாய்க்கு மற்றுமோர் அணி கலனாகும்!

முனைவர் சு. சௌந்தரபாண்டியன்
பதிப்பாசிரியர்

**There is no side effect;**

**This is effect side!**

Published from paper Manuscripts Nos. R. 1904 and R. 8095 of Government Oriental Manuscript Library this **Vaidya Cchattiram** stands majestic with full of indigenous medical practices and medicines flourished on our Tamil soil.

The renderings here were the actual experiences of Tamil Physicians in the past and so this publication has been brought out. In fact we are not upto the mark in elevating our Tamils knowledge of medical science to the world outside. This is 'though little' one such endeavour.

I must thank **Mr. K. Damodaran,** M.A., Director of Archaeology for his guidance.

**Dr. S. Soundarapandian**
Curator

# வைத்தியச் சாத்திரம்

### 1. பிள்ளைபெற மாட்டாதவர்க்கு

செப்பு நெருஞ்சி வேரை யரைத்துத், தொப்புளைச் சுற்றித் தடவினால் குழந்தை பிறக்கும்!

### 2. மூன்றாம் முறைக் காய்ச்சலுக்கு

மிளகு
எருக்கொட்டை
வெள்ளைப்பூடு
சிறுபூளை

இவற்றைத்தட்டிச், சிறுநீர் கூட்டி, நசியமிடவும்.

### 3. அரையாப்புக் கட்டிக்குப் பற்று

பீர்க்கங் கொழுந்து
வேளை வேர்
சிறுகீரை வேர்
எட்டிக் கொட்டை
சுண்ணாம்பு

இவற்றைக் கோழிமுட்டை வெள்ளைக் கருவிலரைத்துப் பற்றுப் போடத் தீரும்.

### 4. பிள்ளையில்லாத பேர்களுக்கு

அமுக்கிராங்கிழங்கு வராகனெடை 4. பசுவின் பாலிலரைத்துக் கொடுக்கவும்.

இப்படி 3 வேளை கொடுத்துப், பத்தியம் - பாலுஞ்சோறு; கடும்பத்தியம்.

### 5. நீர்ச்சீழ், இரத்தம் விழுதலுக்கு

எள்ளுப்பிண்ணாக்கும், மயிலிறகும் பொடித்துப், புகை கொடுத்துப், பாலுஞ்சோறும் பத்தியமாயிருக்கவும்.

### 6. காமாலைக்கு

வேலிப்பருத்தி வேர்

சுக்கு

மிளகு

திப்பிலி

இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துச் சுண்டைக்காயளவு உண்டை செய்து, நிழலிலுலர்த்தி, வெந்நீரிலொரு குளிகை கொடுக்கப் பாண்டு காமாலை தீரும்!

பத்தியம் - புளி, புகை நீக்கியிருக்கவும்.

### 7. வெள்ளை விழுதலுக்கு

விடதலை யிலை பசுவின் /பாலிலரைத்துக் சுழற்சிக்காயளவு கொடுக்கவும்,

புளி, புகை நீக்கவும்.

### 8. நீரிழிவுக்கு

தேற்றாவிரையும், வில்வயிலையு மரைத்து, ஏழுநாள் கொடுத்து உப்பு, புளி நீக்கியிருக்கவும்.

### 9. காதில் சீழ் விழுதலுக்கு

திப்பிலி
கருஞ்சீரகம்
வலம்புரிக்காய்
முத்தெருக்கஞ்செடி

இவற்றைப் பொடித்து, நல்லெண்ணையிற் போட்டு, அதில் ஒரு பலகறை உடையாமற் போட்டுக் காய்ச்சிக் காதில் விடவும்.

### 10. மரகுங் கொடியும் விழ

பருத்திக் கொட்டையைத் துவைத்து, இரண்டு படி தண்ணீரி விட்டுக் காய்ச்சி, நல்லெண்ணை, சுக்கு, மிளகு கொஞ்சம் பொடித்திட்டுக் கொடுக்கவும்.

### 11. பஞ்ச சூத மெழுகு

இங்குலிகம்
பூரம்
வீரம்
செந்தூரம்
இரசம்

வகைக்கு வராகனெடை 2, சுத்தித்துக் கரண்டியிலிட்டுச் செப்பு நெருஞ்சிச் சாறு, முருங்கைப்பூச்சாறு, முலைப்பால் இவை சரிகூட்டிக் கலந்து, ஒரு சாமஞ் சுருக்குக் கொடுத்து மெழுகுப் பதத்தில் எடுத்துக் கலுவத்தில் ஒரு சாமமரைத்துக் கொம்புச் சிமிழில் வைத்துக்கொண்டு, முலைப்பாலில் கொடுத்தால், சன்னி 13, தோஷம் 7, இசிவு, சகலச் சுரமும் தீரும்!

வச்சிரவல்லிக் கஷாயத்தில் குன்மம் 8ம் சித்திரமூலக் கஷாயத்தில் சூலை, முடருவாய்வு, கிரந்தி, அரையாப்புக்கு, மிளகுச் சூரணத்தில் கொடுக்கவும்.

இன்னும் பலவித வியாதி தீரும்!

அனுபான மறிந்து கொடுக்கத் தீரும்!

(கொம்புச்சிமிழ் - மாட்டுக் கொம்பினை இழைத்துச் செய்யப் பட்ட சிமிழ்; அனுபானம் - மருந்தைச் சேர்த்துக் கொடுக்கப் பயன்படும் தேன் போன்ற பிற பொருள்)

## 12. குண்டியக்கரத்திற்கு

முசுமுசுக்கை இலை
ஈரவெங்காயம்

வகைக்குப்படி 1, இவற்றை இடித்துப் பிழிந்து கொடுக்க, அக்கர முறிந்து, இரத்தம் உடனே நிற்கும்!

இப்படிக் கொடாவிட்டால், மோசம் வரும்!

## 13. வாயிலும் மூக்கிலும் இரத்தம் விழுதலுக்கு

கடுக்காய்ச் சூரணத்தை ஆடாதோடைச் சாற்றில் பிசைந் துலர்த்தவும்.

இப்படி 14தபா பாவனை செய்துலர்த்திச் சூரணித்து, 3 கழஞ்செடை தேனில் குழைத்துக் கொடுக்க மூக்கில், வாயில். தண்டில் விழுகிற இரத்தம், இருமல், பெரும்பாடு இவைகள் தீரும்!

## 14. இரத்த ரோகத்திற்கு

துளசியிலைச் சாறு
பசுமஞ்சள் சாறு
சாரணையிலைச் சாறு
நல்லெண்ணை

வகைக்குப் படி 1/2, இவற்றைப் பதமாகக் காய்ச்சி, நசியஞ் செய்யத் தீரும்!

## 15. பெருவயிற்று வீக்கத்திற்கு

பேய்ப்பீர்க்கங்காயைத் துவைத்துப் பிழிந்த சாற்றைக் குழம்பாகக் காய்ச்சி, அதற்குச் சரி புளி சேர்த்துத் துழாவியெடுத்துக்கொண்டு, பாக்களவு இளவெந்நீரில் எட்டுநாள் கொடுக்கப், பெருவயிறு, புறநீர்க்கோவை தீரும்!

## 16. கைகரல் முகம் வீங்கினால்

மூக்கிரட்டை வேர், கீழாநெல்லி வேர் சரிகூட்டி, விளங்காயளவு அரைத்து, ஒரு சிரங்கை அரிசிமாவில் கலந்து கூழாகக் காய்ச்சி 3 நாளுண்ணத் தீரும்!

## 17. வயிற்றுக் கடுப்பிற்கு

| | |
|---|---|
| சாதிக்காய் வராகனெடை | 1 |
| சாதிப்பத்திரி வராகனெடை | 2 |
| குராசானியோமம் வராகனெடை | 3 |
| இலவங்கம் வராகனெடை | 1 |
| திப்பிலி வராகனெடை | 6 |

இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றி லரைத்து, ரொட்டிசுட்டுக் கொண்டு, அவரைப்பருப்பளவு சாப்பிடத் தீரும்!

(குராசானியோமம் - குராசானி எனும் ஒரு வகை ஓமம் விளையும் பூடு)

## 18. இரத்தக் கடுப்பிற்கு

கஞ்சாசூரணம் வராகனெடை 6

சாதிக்காய்

இலவங்கம்
கசகசா
குராசானியோமம்
வெள்ளுள்ளி

வகைக்கு வராகனெடை 2

விடத்தேர்
விராலி
ஆவிரை
கொளிஞ்சி

வகைக்கு வடி-1, இவை கூட்டியரைத்து, 8 புடமிட்டுப் பனை வெல்லங் கூட்டியரைத்து, 4 புடமிட்டு அரைத்துக் குளிகை செய்து கொடுக்கத் தீரும்!

பத்தியம் - புழுங்கரிசிச் சோறு. [வடி - சிறுதடி (cane)]

## 19. பீனிசத்திற்கு

| | |
|---|---|
| அபினி வராகனெடை | 1 |
| கோரோசனை வராகனெடை | 1 |
| கஸ்தூரி பணவெடை | 1 |
| குங்குமப்பூ பணவெடை | 1 |

இவற்றை வஸ்திரப்புடம் செய்து, பசுவின் நெய்யிலிட்டுப் பதமாகக் காய்ச்சி, வடித்து, நசியஞ் செய்து, பத்தியமாய் இருக்கவேண்டியது.

## 20. மருந்தீட்டுக்கு

ஊஞ்சப் பட்டையை வாய் பேசாமல் கொண்டுவந்து, தண்ணீரில் பிசைந்து கொடுத்துப் பயற்றங்கஞ்சி காய்ச்சிக் கொடுக்க, மருந்து விழும்!

(வசிய மருந்தை எடுக்கும் முறை இது.)

### 21. பெரும்பாட்டுக்கு

ஆதொண்டையிலைச் சாறு,

பசுவின் நெய்

வகைக்குப் படி 1/4, மிளகுச் சூரணம் பலம் 1/4 இவற்றைக் கலந்து 3 நாள் கொடுக்கவும்.

பத்தியம் - கோழி மிளகுச் சாறு, கொள்ளு மிளகுச் சாறு கூட்டவும்.

### 22. வெள்ளை வெட்டைக்கு

ஆவாரம்பட்டை

தென்னம்பாளை

புளியங்கொட்டைத் தோல்

தேற்றாவிதை

இவை சரிகூட்டி, யரைத்துப், பசுவின் பாலிற் கொடுக்கத் தீரும்!

மேற்படி வியாதிக்கு, நெல்லிப் பட்டையை எருமை மோரி ஊறவைத்து, இடித்துப் பிழிந்து, மேற்படி மோரில் 10 நேரம் குடிக்கவும்.

பத்தியம் - பசுவின் தயிர், மோர் சேர்த்துக் கொள்ளத் தீரும்!

### 23. மேகத்திற்கு

இலவம்பட்டை

ஆதொண்டம்பட்டை

ஊஞ்சல்பட்டை

காட்டுமுருங்கைப்பட்டை

இவை நான்கு மரைத்துப் பசுமூங்கில் குழாயிவிட்டு, வெள்ளாட்டு மூத்திரஞ் சேர்த்து. வேடுகட்டி, 5 நாள் கெசபுடம் வைத்தெடுத்து,

சுக்கு
மிளகு
திப்பிலி
ஓமம்
வெள்ளுள்ளி
கருஞ்சீரகம்
தும்பராஷ்டகம்
அக்கிரகாரம்

இவை கோமயம் விட்டரைத்து, வெற்றிலையிற் புடமிட்டு, மறுபடி யரைத்துக் குளிகை செய்து . . . . .

## 24. சன்னி சயித்தியத்திற்கு

இஞ்சிச்சாறு சிறுநீரிற் கொடுத்துக், கரடி மாமிசம் சேர்க்க, இருமல், ஏங்கல் முதலியன தீரும்!

(சயித்தியம்-குளிர்)

## 25. பிள்ளை பெற்ற வயிற்றில் சீதரத்தம் விழுந்தால்

வசம்பு
சுக்கு
ஊமத்தன் வேர்

சரிகூட்டி யரைத்து, 3 நாள் பூசவும்

கருங்குறுவை நெல்லரிசியைத் தீட்டி 2-ஆவது கழிநீர், அத்திப்பட்டைச் சாறு கூட்டிச், சர்க்கரை சேர்த்து, 3 நாள் கொடுக்கவும்.

பத்தியம்-அரைக்கீரை கூட்டவும்.

### 26. ஆறாத புண்களுக்கு

இரசம்
கந்தகம்
கருங்குங்கிலியம்
காசுக்கட்டி
வெளிச்சிப்பிசின்
வேம்பாடம்பட்டை
அதிமதுரம்
செங்கழுநீர்க் கோஷ்டம்
சுக்கு
கடுக்காய்
கஸ்தூரி மஞ்சள்
வெள் வெங்காயம்
வசம்பு
செண்பகப் பூ
கடுகு
கருஞ்சீரகம்
நன்னாரி வேர்
மலைதாங்கி வேர்
புங்கம் வேர்
அவுரி வேர்

வகைக்கு வராகனெடை 1, நல்லெண்ணை படி ½ யில் சூரணித்துப் போட்டுப், பதமாய்க் காய்ச்சித், துணியில் நனைத்துப், புண்ணிற் போட்டு, மேலே ஊனானிலை வைத்துக் கட்டவும்.

கண்டமாலை
பிளவை
விப்புருதி
அரையாப்பு

பவுத்திரம்

கன்னப்புது

முதலிய சகல ரணங்களும் ஆறும்!

## 27. சன்னிக்கு

முற்றிய தேங்காய், வசம்பு இவை சூரணித்து, வேப்பெண்ணை விட்டு வணக்கிப் பொட்டணங் கட்டவும்.

சுக்கு

மிளகு

திப்பிலி

தும்பையிலை

இவை தட்டி நசியமிடவும்.

பல்கிட்டல்

மேல்மூச்சு

வாதச்சன்னி

முதலியன தீரும்!

## 28. காது கேளாததற்கு

பன்றிமூள்ளை, புங்கெண்ணை விட்டுக் காய்ச்சிக், காதில் விட்டுக், காற்றுப் படாமல் 3 நாளிருக்கக் கேட்கும்!

காதில் சீழ், புழு முதலிய நோய்களுந் தீரும்!

## 29. மாலைக் கண்ணிற்கு

எலிப்பிழுக்கலகையைக் குப்பைமேனிச் சாற்றிலுறைத்துக் கண்ணி விடத் தீரும்!

## 30. ஆசனப் பவித்திரத்திற்கு

எட்டிவேர்

நஞ்சுண்டாம் வேர்

சிவந்திக் கொடி

பிரண்டைக் கிழங்கு

கருஞ்சீரகம்

சுக்கு

மிளகு

திப்பிலி

ஒரு கொட்டைப் பூடு

இவை சரிகூட்டி அரைத்து, நல்லெண்ணையில் 9 நாள் குடித்துக் களிகிண்டி 9 நாள் சாப்பிடவும்.

(ஒரு கொட்டைப்பூடு-வெள்ளைப் பூண்டில் வகை; ஒருப்பூடு எனவும படும்)

## 31. துவாரத்திற்கு

எருக்கிலையில் நல்லெண்ணை தடவி, வாட்டிக் கட்டவும்.

## 32. பவுத்திரத்ற்கு

தேத்றாவிதையை எலுமிச்சங் காயளவு அரைத்துப், பசுவின் பாலில் சர்க்கரை சேர்த்து, ஒன்று சேர்த்து 9 நாள் குடிக்கப் பவுத்திரம் தீரும்!

(ஆண்குறிக்கு அருகில் வரும் கட்டியைப் பவுத்திரம் என்பர்)

### 33. கண்டமாலைக்கு

நேர்வாளம்
வெள்ளைப் பாஷாணம்
கொடிவேலிவேர்

இவை சரிகூட்டியரைத்துச் சீலையிலூட்டிப் புண்ணுக்கு வைக்கவும்; ஆணி விழும்!

செம்புண் பட்டால்,

வேப்பம்பட்டை
தவசுமுருங்கைவேர்
நாயுருவிவேர்
கிளுவன் வேர்

இவை சரிகூட்டி, யரைத்துச் சீலையிலூட்டிப் புண்ணிற்போட ஆறும்!

### 34. பொன்னாங்கண்ணித் தைலம்

பொன்னாங்கண்ணி வேர்
வெட்டி வேர்
இலாமிச்சம் வேர்
ஓரிலைத் தாமரை வேர்
சிறுகீரை வேர்

வகைக்குப் பலம் 1

சாதிக்காய்
அதிமதுரம்
மாசிக்காய்

வகைக்குக் கழஞ்சு 1, இவற்றைப் பால் வார்த்தரைத்து, 2 படி நெய்யிற் கரைத்து, மெழுகுப் பதமாகக் காய்ச்சி வைத்துக் கொண்டு, 1 கரண்டி அளவு கொண்டு, உப்பு, புளி நீங்கியிருக்கக் கணை ரோகங்கள், உள்சுரம், உஷ்ணம், வறட்சி, கம்மல், மேகப் புண் முதலியவை தீரும்!

### 35. எலிக்கடிக்கு

கருவேலிலையும், மேற்படி சிராயும் துவைத்துப் பிழிந்து காய்ச்சி விளக்கெண்ணை கலந்து சாப்பிடத் தீரும்!

### 36 .வண்டுக்கடிக்கு

அரளிப் பழுப்பு
பாலைப் பழுப்பு
எருக்கம் பழுப்பு
இம் மூன்றையும் கருக்கி,
வசம்பு
மஞ்சள்
பொரும்பிவேர்
நில ஆவாரை வேர்
இவற்றை எருக்கம்பால் விட்டரைத்து, விளக்கெண்ணையிற் குழைத்துத் தடவ, வண்டுக்கடி தீரும்!

### 37. நரன்கரம் முறைக்காய்ச்சலுக்கு

எருக்கிலை வடக்கே போகிற வேருக்குக் கோழிப் பலி கொடுத்துத் தூபதீபங் காட்டியெடுத்துக் காதில் கட்டவும்.

பெருமரத்துப் பட்டையுந், தழையுந் துவைத்துக் காடியிற் பிசைந்து, பிழிந்து வடிகட்டிக் கோழி இரத்தம் கலந்து கொடுக்கவும் தீரும் !

### 38. வெள்ளை இரத்தம் விழுவதற்கு

தாழைவிழுதைப் பாகுபோல் நறுக்கி, அப்போதரைத்த சந்தனம், சீனிச்சர்க்கரை கூட்டிப் புள்ளிமான் கொம்பு உறைத்துச் சேர்த்துக் கொடுக்கத் தீரும்!

### 39. சுரத்தின் பேரில் கண்ட வீக்கத்திற்கு

கையாந்தகரை
தூதுவளை
நொச்சி
பிரடி
நீர்முள்ளி
காட்டுமல்லிகை வேர்
கரந்தை
பேராமுட்டி
சுக்கு

இவை நறுக்கிக் காயஞ்செய்து கொடுக்கத் தீரும்!

### 40. குன்மத்துக்கு

சின்னி யிலையும், ஈர வெங்காயமும் கசக்கிச் சாறுவாங்கி. விளக்கெண்ணை கலந்து கொடுக்க 8 வகைக் குன்மந் தீரும்!

### 41. மாந்தக்குளிகை

சங்கு
முடக்கொற்றான்
நாயுருவி
சாரணை
வேலிப்பருத்தி
நிலவேம்பு
பொடுதலை
நொச்சி

இவற்றின் கொழுந்துகளைச் சரிகூட்டிப், பொன்னிறமாக வறுத்ததில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், வசம்பு, பெருங்காயம ,வகைக்கு

வராகனெடை, சேர்த்துச், சிறுநீர் விட்டரைத்துச் சுண்டைக்காயளவு உண்டை செய்து நிழலிலுலர்த்தி, வெந்நீரிற் கொடுக்க.

1. மாந்தம்
2. மாந்தச் சுரம்
3. வயிற்று நோய்
4. சயித்தியம்
5. ஏங்கல்
6. இருமல்
7. பெரும்பீக்கழிச்சல்
8. குளிர்மாந்தம்
9. சோபம்

தீரும்!

சின்னியிலை
அருகு
மஞ்சள்
வசம்பு
ஓமம்
ஒரு கொட்டைப் பூண்டு
மேற்படி குளிகை!

சேர்த்தரைத்து, மேலே துவளையிடக்

குளிதோடம்
முட்டுத் தோஷம்
பட்சிதோஷம்

முதலியவை தீரும்!

## 42. வலிப்புக்கு

சின்னித் தழை
தளிஞ்சித் தழை
துளசியிலை

மருதோன்றியிலை

ஊனானிலை

இவ்வைந்தையும் துவைத்துக் காராட்டுப் பாலில் பிசைந்து வடி கட்டி, ஒருகொட்டைப் பூண்டும் வசம்பும் அரைத்துக் கலக்கிக் கொடுத்து, மேலிலும் துவளையிட, உள் வலிப்பு தீரும்!

## 43. உடலிளைத்த பிள்ளைதேற

சிறுபூளை சமூலம்

விடத்தலாம் பட்டை

விடத்தலாம்பட்டைத்தழை

ஊஞ்சமரத்தில் கரிக்குருவியிருந்த கொம்பு அசைவுநிற்குமுன் அப்பட்டையுந் தழையும்

சேர்த்து, நன்றாய்த் தட்டி, நல்லெண்ணையி லூறவைத்து, சுண்டைக்காயளவு நல்லெண்ணையிற் கொடுத்து, மேலிலும் துவளையிடத் தேறும்!

## 44. வயிற்றுக் கடுப்புக்கு

மாம்பட்டை

கிளுவம் பட்டை

நாவல் பட்டை

இவற்றை யரைத்துப் பிழிந்து, நல்லெண்ணையிலிட்டுக் காய்ச்சி 3 நாள் உள்ளுக்குக் கொடுக்கத் தீரும்!

## 45. நீரடைப்புக்கு

வெள்ளரிவிதை நெல்லியள வரைத்ததில், பொரித்த வெங்காரம் அரைப்பண வெடை கலந்து, பசுவின் பச்சைப்பாலில் கொள்ளத் தீரும்!

### 46. கக்குவானுக்கு

சங்கங் கொழுந்தும், ஈரவெங்காயமும் தட்டிச் சாறு பிழிந்து கொடுக்கத் தீரும்!

### 47. கர்ப்பமழிக்க

சுண்ணாம்புத் தண்ணீரில் ஆழாக்கு எள்ளை நனையவைத்து, அரைத்து, மஞ்சளும் அரைத்துச் சேர்த்து, நன்றாகக் கூட்டி யரைத்துக் கொடுக்கக், கர்ப்ப மழிந்து கரைந்துபோகும்!

### 48. வரந்தி வகைக்கு

வில்வவேர்
கொத்தமல்லி
நெற்பொரி
அதிமதுரம்
நெல்லி
முந்திரிப்பழம்

இவற்றை யரைத்துச், சீனிச்சர்க்கரை கலந்து, கசாயமிட்டுக் கொடுக்க, வாந்தி, ஆரோசியம், வாய் நீரூறல், நெஞ்செரிப்பு முதலியவை தீரும்!

### 49. சன்னிக்குத் தைலம்

கோழிமுட்டைத் தைலம்
வேப்பெண்ணை
புங்கெண்ணை

சரிகூட்டி, யதில் கம்பளிப்பிசின், பெருங்காயம் வகைக்கு வராகனெடை 1 பொடித்துப் போட்டுக், காய்ச்சி, மேலே துவளையிட்டுப் பிடிக்கத் தீரும்!

## 50. மூல முளை விழ

ஆண்பனைக் கதிரையுலர்த்தி, யிடித்து, வடிகட்டி, யதில் நல்லெண்ணை விட்டு. சற்றே வெதுப்பி, நான்கு உருண்டை, பாக்களவாக உருட்டி, நான்கு நாள் உட்கொள்ள மூல முளை விழும்!

## 51. செத்தபிள்ளை விழ

(1) ஊமத்தை வேரைப்பிடுங்கி, வளையம் செய்து, கால் பெருவிரலில் போட்டிருக்கப், பிள்ளை விழும்!

(2) பாவட்டை வேரைப்பிடுங்கி யரைத்து, வயிற்றில் கீழ் நோக்கிப் பூசப் பிள்ளை விழும்!

## 52. விரியன் கடிக்கு

ஆடு தீண்டாப் பாளை சமூலம் அரைத்துத் தண்ணீரில் கலக்கிக் குடிக்கத் தீரும்!

(சமூலம் - எல்லாம்; அஃதாவது, வேர், தண்டு, இலை, காய், பூ முதலிய அத்தாவரத்தின் எல்லா உறுப்புகளும்)

## 53. தேள்கடிக்கு

பேயத்திப்பட்டை, மிளகு இவ்விரண்டும் சிறுநீரிலரைத்து, மூக்கில் நசியமிடத் தீரும்!

*(நசியம் - முகர்ந்து பார்த்தல்)*

## 54. குளிருக்கு

முட்டை 2, எருக்கம்பால், சுண்ணாம்பு இவைகளைக் குழைத்து, வெற்றிலையில் தடவித் தின்னத் தீரும்!

### 55. காய்ச்சலுக்கு

நொச்சிக் கொழுந்தையரைத்து, வெருகடிப்பிரமாணம் வெந்நீரில் கொள்ளவும்.

### 56. எலிக்கடி, வண்டுகடிக்கு

கொல்லங்கோவைக் கிழங்கும், பேய்ப்பீர்க்கின் வேரும் நிழலிலுலர்த்திச் சூரணம் செய்து இளவெந்நீரில் கொள்ளத் தீரும்!

### 57. கண் புழுவுக்கு

பன்றிக்கொம்பு
கோழி நெஞ்செலும்பு
கழுதைப் பல்
வெள்வெங்காயச்சருகு
பீதரோகணி

இவை பொடித்து, எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து, மாத்திரை செய்து, நிழலிலுலர்த்திக் கொண்டு அனுபானங்களிலரைத்துப் போடவும்.

### 58. காதில் புழுவுக்கு

சங்கங் கொழுந்தும், முள்ளிப் பழமு மரைத்து எண்ணையி விட்டுக் காய்ச்சிக் காதில் விடப், புழு விழும்!

### 59. மூலம் பருத்ததுக்கு

வேப்பங் கொழுந்தும், மஞ்சளுமரைத்துப் பூச உடையும்!

## 60. கருப்பம் உண்டாக

(1) வட்டத்துத்தியிலை பிடி 1, பச்சையரிசி பிடி 1 - இவ்விரண்டையுமிடித்தடை தட்டி, பசுவிணெய்யில் சுட்டு வாசலுக்குத் தூரமான மற்றாநாள் முதல் 3 நாள் சாப்பிடப் பிள்ளையுண்டாகும்!

நல்லெண்ணையில் தின்றால் ஆண்பிள்ளை யுண்டாகும்!

(2) கருங்கம்பளியைச் சுட்டகரி, செம்பருத்திப்பூ இவ்விரண்டையும் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து, மேற்படி சாற்றில் கலக்கி, 3 நாள் குடித்தாலும் பிள்ளையுண்டாகும்!

## 61. திரளாத பெண்ணுக்கு

புளிய நடலைக் கிழங்கையரைத்துப் பசுவின் பாலில் மூன்று நாள் கொள்ளத், திரளும்!

## 62. வெள்ளி செய்ய

கோழி முட்டையில் ஒரு கழஞ்சு பாதரசம் இட்டுச், சட்டி நிறையப் பால்விட்டு, முட்டையை வைத்து மூடித் தீயெரிக்கவும்; குளிகையாகும்.

அதில், பணவெடை செம்பை யுருக்கி முகத்திலிட வெள்ளியாம்!

## 63. பேய்நாய், பேய்நரி, எலி, நட்டுவக்காலி, கடி விஷத்துக்கு

எருக்கம்பாலில் நெல், அவல் ஊறப்போட்டு, நாலு அவல் கொடுக்க வாந்தியாகும்; பின்பு உப்பிடாமல் கஞ்சி குடிக்கவும்.

இப்படி 3 நாள் கொடுக்கத் தீரும்!

நாலு வெற்றிலையும், உப்பும் சேர்த்துக் காய்ச்சி உடனே கொடுக்கவும்.

## 64. சோகைக்கு

விளக்கெண்ணை படி $\frac{1}{2}$

பொடுதலைச் சாறு

ஈரவெங்காயச்சாறு

பெருங்குமட்டிக் காய்ச்சாறு

வகைக்குப் படி $\frac{1}{4}$

வெந்தயம்

பெருங்காயம்

வகைக்குப் பலம் 3

இவ்விரண்டையும் மேற்படி சாற்றில் அரைத்துக் கலக்கி, மேற்படி எண்ணையும் கூட்டிப் பதமாக காய்ச்சி வடித்துக்கொண்டு, பத்திய மாய்ச் சாப்பிடவும்.

## 64. இருமலுக்கு

தாளகம், சிப்பியோடு இவ்விரண்டும் சரியெடை சேர்த்து, வேளைச்சாறுவிட்டு நன்றாயரைத்து, வில்லை செய்து, ஒட்டிவிட்டு, மூடிப் புடமிடப் பற்பமாகும்!

மேற்படி பற்பத்தைத் துணியிலூட்டித் திரியாகச் செய்து, எருக்கிலையில் சுற்றி புகைபிடிக்க, இருமல் ஈளை தீரும்!

## 65. வாத, பித்த, சிலேட்டுமச் சுரத்திற்கு

செங்கழுநீர்க் கோஷ்டம்

சுக்கு

திப்பிலி

சிறுதேக்கு

நிலவேம்ப

கண்டங்கத்தரி வேர்

சிறுகாஞ்சோறி வேர்
பற்படாகம்
முத்தக்காசு
சீந்தில் கொடி

இப்பத்தும் வகைக்கு நான்கு வராகனெடை வெவ்வேறாக யிடித்து, ஆறாய்ப் பகிர்ந்து, ஒரு பங்கில் ஒருபடி நீர், வார்த்து, எட்டிலொண் றாய்க் காய்ச்சி, இரண்டுநேரம் மூன்று நாள் குடிக்க, எல்லாச்சுரமும் தீரும்!

## 66. ஆதிவயிரவி மாத்திரை

நாலி
துத்தம்
மனோசிலை
கந்தகம்
சாதிலிங்கம்
வெண்காரம்

இவை சரியெடை கூட்டி, எலுமிச்சம்பழச்சாற்றி லரைத்து, மாத்திரை செய்து கொண்டு, சடங்கக் கசாயத்திலாவது, இஞ்சிச் சாற்றிலாவது கொடுக்கச் சன்னிவாதம் தீரும்!

(சடங்கக் கசாயம்-6 பொருள்களைச் சேர்த்துச் செய்யப்படுவது)

## 67. மேற்படி குண்டை

எலிப்பாஷாணம்
அரிதாரம்
இரசம்

வகைக்குக் கழஞ்சு 1, சோம்பிலைச் சாற்றிலரைத்து, 3 நாளூற வைத்துக், காடியிற் கழுவிப், பாக்களவு சேம்பிலை சேர்த்து அரைத்து, மிளகள்வு மாத்திரை செய்துலர்த்தி, முதல்நாள் பேதிக்கை கொடுத்து, மற்றாநாள் பசுந்தண்ணீரில் கொடுக்கவும்.

## 68. சிலேட்டுமச் சுரத்திற்கு

கடுக்காய்
கொத்தமல்லி
முத்தக்காசு
பற்படாகம்
சிறுதேக்கு
தேவாரம்

வகைக்குக் கழஞ்சு 1, ஒரு படி நீரில் உழக்காகக் காய்ச்சிக் கொடுக்கவும்.

## 69. நடுக்கக் காய்ச்சலுக்கு

அழிஞ்சிவேர்ப்பட்டை 4 காசெடை
மிளகு 1 காசெடை
வசம்பு ½ காசெடை

இம்மூன்றும் சுக்குக் கசாயத்தில் நன்றாக அரைத்துச் சுண்டைக் காயளவு மாத்திரை செய்து, நிழலிலுலர்த்தி, இஞ்சிச்சாற்றிற் கொடுக்கவும்.

## 70. கடுங்காய்ச்சலுக்கு

கருப்புக் கட்டி சந்தனமும்
காட்டில் பழுத்த பழம்புளியும்
விருப்பிக் கடைந்த வெண்ணையுடன்
விடியற் காலம் கொள்ளீரேல்
பருப்பு பால்நெய் முருங்கையிலை
பரிகா ரஞ்செய் புளிதவிர்த்து
நெருப்புப் போன்ற சுரமெல்லாம்
நில்லா தோடும் நிச்சயமே!

## 71. நாலாமுறைக் காய்ச்சலுக்கு

துளசியிலையை அரைத்து வைத்துச் சிறுநீர் விட்டுப் பிசைந்து பிழிந்ததில் ஒரு பிடி மிளகரைத்துக் கரைத்துக் காய்ச்சி, கச்சுவர வர ஆரம்பிக்கும்போது சாப்பிடவும்

இப்படி மூன்று முறை சாப்பிடவும்.

## 72. மூன்றாமுறைக் காய்ச்சலுக்கு

ஞாயிற்றுக்கிழமை செந்நாயுருவி வேர் கொண்டுவந்து, விநாயகர் வைத்துத், தேங்காய் பழத்துக்குத் தட்சணை வைத்துக் கன்னியழியாதவள் நூற்ற நூலுக்கு மஞ்சள் தடவி, மேற்படி வேர் தெரியாமல் சுற்றி, ஆணுக்கு வலது கையிலும், பெண்ணுக்கு இடதுகையிலும் மோதிரம் போல் போடத் தீரும்!

கொளிஞ்சியிலை ஒரு பிடி துவைத்து, இளவெந்நீரில் கொடுக்கவும்.

## 73. குளிர்மாறலுக்கு

குப்பைமேனியிலை

துளசியிலை

முருங்கையிலை

கையாந்தகரையிலை

சமனாகத் தனித்தனியே கலிப்பாக்களவு மிளகு, வெள்வெங்காயம் ஒவ்வொரு கழற்சிக் காயளவு - இவைகளை யரைத்து வெந்நீரிற் கரைத்துக் குளிர்வருமுன் உடம்பு கரைத்துக் கொட்டாவி வரும் போது கொடுக்க, எல்லா மாறலுந் தீரும்!

## 74. மாறல்விட்டுக் குளிர் விடாமலிருப்பதற்கு

கஞ்சாங்கோரைச்சாறு நாழியில் அதன் விதையரைத்து, எலுமிச்சங்காயளவு அவ்வளவே மிளகரைத்ததும், நாழி நல்லெண் ணையுங் கூட்டிக் காய்ச்சி. ஒரு காசளவு கொடுத்து, மேற்படி சாற்றை மேலே பூசத் தீரும்!

## 75. வாய்ச்சூலை, கட்டுக்கரப்பானுக்கு

விழிம்புச்சாறும், நல்லெண்ணையும் சரிகூட்டி, மூன்றுநாள் கொடுக்கத் தீரும்!

## 76. நான்காமாறல் சுரத்திற்கு

செம்பூலாவுக்கு காய்ச்சல் வருவதற்கு முதல்நாள் காப்புக்கட்டி மாற்றாநாள் காலையில், வலதுகை உள்ளாகச் சுற்றிவந்து சூரியனைக் கும்பிட்டு வடக்கே போகிற வேரை வெட்டி மேற்படி வேர்ப்பட்டையும் ஒரு படி கம்பு அரிசியையும் இடித்து, மாத் தெள்ளி பதினொரு கும்பல் பிடித்து வேகவைத்துப் பிள்ளையார் வைத்துத் தூப, தீப, நைவேத்தியம் செய்து, காய்ச்சல்காரனைக் கும்பிடச் சொல்லி, சாப்பிடவும்.

மறுமுறையும் இப்படியே செய்யவும்.

## 77. காமாதி, விஷபாகம், பாண்டு மகோதரம் வகையறா வீக்கத்திற்கு

விரோசனம்
புளியம் ஈர்க்கு
வேப்பீர்க்கு-
வகைக்குப் பிடி-1
கற்றாழைச்சாறு அரைப்படி
கடுக்காய் 2
சுக்கு 2
கலிப்பாக்கு
புழுங்கலரிசி

இவைகளைச் சட்டிவிட்டு ஒரு வள்ளத் தண்ணீரிலிட்டு, அடுப்பி விட்டு, ஒரு படியானபோது அடுப்பில் மூடி வைக்கவும்; காலையி லிறுத்துக் கடுக்காய், சுக்கு, கலிப்பாக்கு அரைத்து வைத்து, ஒரு பணவெடை விளக்கெண்ணையிட்டு, வடிகட்டிச் சாப்பிடவும்.

இளைப்பானால், மோருஞ் சோறு தின்னப், பேதி நிற்கும்! சுரத்தின்மேல் வீங்கினவனுக்கும் ஆகும்!

### 78. விஷபாகத்திற்கு

ஜாதிக்காய் 10
தான்றிக்காய் 10
கடுக்காய் 10
சுக்கு 10
மிளகு 1 பலம்

வெள்வெங்காயம் 1 வராகனெடை இவைகளை இளவறுப்பாய் வறுத்துப் பொடி செய்து, தும்பையிலைச் சாறு படி 2, வெள்ளாட்டுக் கோமயம் படி 1 கலந்ததில், மேற்படி சூரணத்தைப் போட்டு, அகப்பை ஒன்று துழாவி இறக்கும் போது, எலுமிச்சங்காயளவு எருமை வெண்ணை போட்டுக் கொடுக்கவும்.

### 79. சீதளத்திற்கு

கொத்தமல்லியும், சுக்கும்] சமனாக வராகனெடை 1, சுரம்வந்த நேரம் 5 நாள் குடிக்கத் தீரும்!

### 80. வாதச்சுரத்திற்கு

சுரத்தை
சுக்கு
திப்பிலி
அகில்
கடுகுரோகணி
லவங்கம்
மிளகு

கொத்தமல்லி

வகைக்கு ¼ வராகனெடை போட்டு, வெந்நீரிலரைத்து 3 நாள் கொடுக்கவும்.

### 81. பித்தச்சுரத்திற்கு

சீரகம்

மிளகு

திப்பிலி

சுக்கு

வகைக்கு வராகனெடை வெள்வெங்காயம் கூட்டி, வெந்நீரிலரைத்துக் குடிக்கவும்.

பித்தச் சுரம் தீரும்!

### 82. சிலேட்டுமச் சுரத்திற்கு

சுக்கு

மிளகு

திப்பிலி

சேவியம்

சித்தாமல்லி

அகில் கொண்டி

திப்பிலி மூலம்

கொத்தமல்லி

சீரகம்

கடுகுரோகிணி

வகைக்கு வராகனெடை ¼, வெந்நீரிலரைத்துக் கொடுக்கவும்.

### 83. அசீரணச் சுரத்திற்கு

அசமதாகம்

சுக்கு

திப்பிலி
கடுக்காய்
இந்துப்பு
சித்திரமூலம்
வெள்ளுள்ளி
முருங்கைவேர்ப்பட்டை
பற்படாகம்

வகைக்கு $\frac{1}{4}$ வராகனெடை வெந்நீரில் அரைத்துக் கொடுக்கவும்.

## 84. தொந்தச் சுரத்திற்கு

இஞ்சி
காளவாயப்பட்டை
நொச்சியிலை
சித்திரமூலம்
கையாந்தகரை

இவை நசுக்கிப் பிழிந்த சாற்றில்,

சுக்கு
மிளகு
திப்பிலி
வெள்ளுள்ளி

இவைகளை அரைத்துக் கொடுக்கவும்.

## 85. வண்டுக் கடிக்கு

நாற்பது வருஷத்துக்கு மேற்பட்ட பிராம்பட்டையைச் சிறிதாக நறுக்கிச் சட்டியிலிட்டு வெள்ளாட்டுக் கோமயம் ஒரு வள்ளமிட்டு, ஒரு படியாகக் காய்ச்சி, அந்தப் பட்டையை எடுத்துப்போட்டு, ஒரு சேரை பச்சைக் கடலையைப் போட்டு வேகவைத்துத், தினம் ஒரு கடலையாய் மூன்று நாள் சாப்பிடவும்.

பின்பு நாள் 2 கடலையாக, 3 நாள் சாப்பிடவும்.

இப்படி, 3, 4, 5 கடலையாக அரை மண்டலம் சாப்பிட்டு வரவும்.

கைப்பு, புளி நீக்கவும்.

## 86. பொறிவண்டுக் கடிக்கு

பேய்ப்பீர்க்கன் விரை
பேய்க்குமட்டிச் சாறு
ஊமத்தங்காய்ச்சாறு
மருள்மஞ்சிச்சாறு
வெள்வெங்காயம்
வெள்ளைக் குப்பைமேனிச்சாறு
வசம்பு

இவை கூட்டிச், சூரியப்புடம் வைத்துக், கோழியிறகினால் பூசத் தீரும்!

ஆவாரங் கொளுந்து 3 படி
குப்பைமேனியிலை சுண்டைக்காயளவு
வெள்வெங்காயம் 3
மிளகு மூன்று
வசம்பு குன்றுமணியளவு

இவைகளை யரைத்துப் புண்ணிலே எருப்பொடி தேய்த்து மருந்தைப் பூசவும்.

மூன்று நாளைக்கு வெந்நீர்விட்டுக் கழுவிப்போடவும்; புங்கன் விதையை யரைத்துப் பூசவும்.

## 87. விஷபாகம், பாண்டு, நீர்க்கோவை

திப்பிலி
மிளகு

வாலுளுவை யரிசி
கார்போகரிசி
விளாவரிசி
கித்தரத்தை
ஜாதிக்காய்
கடுக்காய்

வகைக்குப் 10 காசு எடை அரைத்து...

## 88. கவிசை, உள்நீர்க்கோவை, புறநீர்க்கோவைக்கு

இலைக்கள்ளி
சிவந்தபட்டை

உலர்த்திச் செய்த பொடி படி 1, காய்ச்சியெடுத்துப் பாக்களவு சாப்பிடவும்.

கவிசை
மகோதரம்
நீர்க்கோவை
புறநீர்க்கோவை
மேற்கவிசை
கீழ்க்கவிசை
அகுவை
வெட்டிப்பாவை
வாய்த்திரட்சி
பொருமல்
குன்மம்
குடல்வாதம்
காமாலை
பாண்டு

தீரும்!

பத்தியமிருக்கவும்

## 89. குன்மத்திற்கு

பிரண்டையிலையைக் கணுவை நறுக்கி நீக்கி, 4 வள்ளம் சேர்த்து, 1 முடாவில் 2 படி உப்பு கொட்டி, இப்படி 3 அந்தஸ் தாய் வைத்து, மற்ற பிரண்டைப் பொடியெல்லாம் சுற்றி வைத்துச் சட்டி மூடிக் குழிதோண்டிப் புதைத்து மிடாவும் சட்டியும் தெரி யாமல் மண்போட்டு மூடி, அந்த மிடாவுக் கடியில் குழியாய்த் தோண்டி, 4 வள்ளம் ஊஞ்சக் கொடி நன்றாய்ச் சுற்றி மூடி, துருத்திபோட்டு, உதயநாழிகைக்கு 1 ஜாமம் சென்ற பிறகு அந்த மிடாவுக்கு மேல் போட்டிருக்கிற மண் பொருமல் சுட்டால் மிடாவை யெடுத்துப் பார்த்தால், பிரண்டை பற்பமாயிருக்கும்! உப்பு கறுத்திருக்கும்!

உப்பு பிரண்டைச் சூரணமும் $\frac{1}{4}$ இளவெந்நீரில் 3 விரலளவு அள்ளிக் கரைத்துக் கொடுக்கவும்.

பத்தியம் - பசுவின் பால், மோர் ஆகும்.

கைப்பு, புளிப்பு நீக்கவும்.

## 90. வரந்தி, குன்மத்திற்கு

வெள்வெங்காயம் எலுமிச்சங்காயளவு அரைத்துப் பாலுடன் 8 நாள் கொள்ளவும்.

## 91. எரி குன்மத்திற்கு

கொத்தாத்தழையைப் பறித்துப், பச்சரிசியில் போட்டுப் பால்சோறாக்கிப் பசுவின் நெய் வார்த்துண்ணவும்.

இந்துப்பு
பெருங்காயம்
சுண்ணாம்பு

இம்மூன்றும் பேயன் வாழைப்பழத்தில் வைத்து முழுங்கவும்.

நொச்சிக்கொழுந்து
வெள்வெங்காயம்
மிளகு
கவைப்பருப்பு

இவை நான்கும் அரைத்து, மோரில் குடிக்கவும்.

இலைக்கள்ளி வேர்ப்பட்டை யுலர்த்திச், சூரணித்து, வடிகட்டி, அந்தத்தண்ணீரை யிறுத்து, நல்லெண்ணையும் வேப்பெண்ணையும் விட்டு, முன்சொன்ன கடைச்சரக்கையும் இடித்த சூரணத்தையும் போட்டுக் காய்ச்சி 1 படி, ¾ படியானவுடனே, கடுகுப்பதத்திலிறக்கி, 3 நாளுக்கு 1 தடவை முழுகி வரவும்.

பத்தியம் - கைப்பு, புளிப்பு நீக்கவும்.

## 92. மண்டைநோவுக்கு

வலம்புரிக்காய்
மான்கொம்பு
மாட்டுக்கொம்பு
தலைமயிர்
மயிலிறகு

இவைகளைப் பொடித்துப் புகை காட்டவும்.

## 93. பௌத்திரத்திற்கு

நிலவாகைச் சூரணம் வெருகடி வெந்நீரில் கொள்ள, எருமைக்கடா மாமிசம், தேற்றாங் கொட்டைப் பிரமாணம் நிழலிலுலர்த்தி, ஆசனத்திற்குள்ளே 3 நாள் 2 நேரமும் புகை பிடிக்கவும்.

புகைபிடித்த பின்பு, மேற்படி உள் மருந்து சாப்பிடவும்.

பல்லுக்குத்து
பல்லரணை
பல்வலி
பல்லடி வீக்கம்

இவைகளுக்கு நோவிக்கின்ற பக்கத்தில் வசம்பு ஒரு கரைப்பூண்டு அரைத்துப் பூசவும்.

முழங்காலுக்குக் கீழாக நன்றாய்ப் பூசவும்; வெய்யிலில், இருக்கப் புழு விழும்!

## 94. பல்வலிக்கு

மருக்காரை
சுக்கு
மருதத்தோல்
வெள்வேல்

கடுக்காயோடேழும் நறுக்கியே, நாலிலொன்றாய்க் காய்ச்சி நாலுநாள் கொப்பளித்தால், பாலன் பல்லாம் கிழவன் பல்!

## 95. பல்லடி வேதனைக்கு

சீயக்காய்விதை 7,9,10 இருக்கின்றதாய்ப் பார்த்து, விதைக்கொரு மிளகு கூட்டி அரைத்து, வெந்நீரில் கொடுக்கவும்.

குதிரைவாலிவேர் கஷாயமிட்டுக் கொடுக்கவும்.

## 96. தந்தவாய்வுக்கு

குப்பைமேனி யிலையும், மிளகும், சுக்கும் தண்ணீரில் காய்ச்சிக் குடிக்க நிற்கும்!

மருதம்பட்டை
வெள்வேலாம்பட்டை
வேப்பம்பட்டை
கடுக்காய்
காசுக்காய்
கலிப்பாக்கு

இவைகளைத் தட்டி நீர்விட்டுக் காய்ச்சிக் கொப்பளிக்கவும்.

## 97. பல்லரணைக்கு

கள்ளிப்பால் பஞ்சிலூட்டிப் பல்லரணைமேல் வைக்கவும்; மோர் விட்டுக் கொப்பளிக்கவும்.

## 98. ஓரண்ட வாதத்திற்கு

சத்திச்சாரணை வேரும், சர்க்கரையும் அரைத்துப் பசுவின் பாலில் குடிக்கவும்.

கழித்தும்பை வேர்ப்பட்டையைப் பாக்குடன் சேர்த்துமென்று ரசத்தை யிறக்கவும்.

இதனுடைய இலையை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்துக் கொட்டைப் பாக்களவு 3 நாள் உண்ண ஒரு விரைவாதம் தீரும்

ஆந்திரவாய்வு
வறட்சி வாய்வு
அக்கினி மந்தமும் தீரும்!

## 99. ஒரு விரை வாதத்திற்கு

ஒரு விரலளவு வசம்பு நாள் ஒன்றுக்குச் சாப்பிடவும்.

இவ்வாறு 1 மண்டலம் சாப்பிடவும்.

### 100. கண்டமாலைக்கு

நீலிவேர் அரைத்துக் கட்டவும்.

இப்படிப் 15 நாள் கட்ட ஆணி தெரிவிக்கும்.

அதற்குமேல், மேற்படி பாலை அரைத்துக்கட்டப் புண் ஆறும்.

### 101. பௌத்திரத்திற்கு

ஒரு கழஞ்சு இரசத்தை, 2 பணவெடை பருத்தியிலைச் சாற்றில் முறித்து, வெள்ளைச் சீலையிலூட்டிப் புண்ணில் வைக்கவும்.

இப்படி, 4,5 நாள் வைக்கப் புண்கிடமாகும்.

உடனே, பிறகு ஒரு கழஞ்செடை ரசத்தைப் பருத்தியிலைச் சாற்றில் முறித்து, ஊமத்தைச் சாறுவிட்டுத் தினசரி 2 பணவெடை புண்ணில் போடவும்.

இப்படி, 4,5 நாள் பூசவும்.

சுற்றிலும் புண்ணாயிருந்தால், பருத்திக் கொட்டையை வறுத்துப் பால் உபநயம் கட்டவும்.

### 102. கண்டமாலை. புறக் கழலைக்கு

கள்ளிக் கரி
எருக்கிலைக் கரி
ஊமத்தைக் கரி
நாயுருவிக் கரி

சரி கூட்டி, எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்துப் புண்ணில் பூசிவரவும்.

வாழைப்பூவும், செங்கீரையும் உலர்த்தி, நாயுருவிச்சமூலமும் உலர்த்தி, ஆயக்கொழுந்துலர்ந்தி, பனங்கருதுலர்த்தி, வெவ்வேறாய் ஓட்டில் சுட்டுக், காயைப் பொடிசெய்து, ஒன்றாகக் கூட்டிக் குழைத்துப் பூசவும்.

புறக்கழலைக்கு, இந்தச் சாம்பலும் உவர்மண்ணுங் கூட்டிச், சுண்ணாம்போடு சேர்த்துத், தேனில் குழைத்து வைக்கவும்.

தினம், மேலே நன்றாயிட்டு, அந்த மருந்தை வாங்குகிற போது, 3ம் நாள் உடைந்து ஆணி விழும்!

பின்பு, விளக்கெண்ணைப் பஞ்சு போடவும்; புண்ணாறும்!

சுண்டைவேர், இளவெந்நீரிலரைத்துக் குடிக்கவும்; வட்டத் தட்டி வேரை அரைத்துக் குடிக்கவும்.

நாகப்பாம்புச் சட்டையைப் புண்ணிலிட்டு, எண்ணையில் குழைத்துப் பூசவும்.

வேலி அணைஞ்சான் இலையைப் பறித்துச் சாறு பிழிந்து, நல்லெண்ணைச் சரிகூட்டி அமாவாசை ஆரம்பித்து 3 நாள், பௌர்ணமி ஆரம்பித்து 3 நாள் கொடுக்கவும்.

இந்தப்படி, அமாவாசையில் 3 நாள், பௌர்ணமியில் 3 நாள் கொள்ளவும்.

நொவீரை வேர், கிளிமூக்குக் கிழங்கு, வெள்ளரி விதை இந்த மூன்றும் அரைத்துப் பசுவின் பாலில் குடிக்கவும்; புழு, சாகும்!

புண்வாய்க்குக் கள்ளிப்பால் சீலையிலூட்டிப் போடவும்.

வெள்ளரிப் பூவும் கட்டவும்; உடையும்!

அதன்பிறகு, அரசம் பட்டையைத் தட்டிக் கட்டவும்.

பூவரசன் தழையை விளக்கெண்ணையில் கட்டவுந் தீரும்!

## 103. பிள்ளைப் பெற்ற ஜன்னிக்கு

வெள்ளிண்டம் வேர்
விடத்தாலம் வேர்

எருக்கலாம் (வடக்கே போகிற) வேர்
வெள்ளுள்ளி
வசம்பு
மிளகு

இவைகளைத் தட்டி நல்லெண்ணையில் கொதிக்க வைத்துத் தலையிலும் உடம்பிலும் பூசவும்.

### 104. சர்வாங்க வாதத்திற்கு

முனிக்கால் கொண்டு வந்து, வரகரிசியிலிடித்துக் களி கிண்டி, மேலுக்கு வெந்நீர் வார்த்துக் கொண்டு, நல்லெண்ணை, பனை வெல்லம் கூட்டித் தின்னவும்.

3 மாதம் புளி நீக்கவும்.

உகாயிலை 1 பிடி
சங்கிலை 1 பிடி
எருக்கலாம் பூமொட்டு 1 பிடி

இவையெல்லாம் வறுத்து, அரப்பொடி செய்து, வசம்பு, சுக்கு, கடுக்காய், வெள்வெங்காயம், அசமதாகம்-2 சூரணத்தையும் கலந்து, வெருகடிப் பிரமாணம் கொள்ளத் தீரும்!

கைப்பு, புளிப்பு நீக்கவும்.

### 105. குடல் வாதம்

பாவட்டை வேர், மிளகும் அரைத்து, இளவெந்நீரில் கொடுக்கத் தீரும்!

### 106. குடல் முறை வாதத்திற்கு

முடக்கொற்றான் சமூலம்
முருங்கை இலை

குறிஞ்சா இலை
இண்டங் கொழுந்து
வேலிப் பருத்திச் சமூலம்

இவைகளைத் துவைத்து 1 படி சாறு பிழிந்து, அதில் தேங்காய் துருவி 1 படி பால் பிழிந்து, அதில்,

சுக்கு
மிளகு
ஓமம்
கடுகு
வெந்தயம்
கருஞ்சீரகம்
இந்துப்பு 4 காசு எடை

இவைகளை அரைத்துக் கலக்கிச் சட்டி காய வைத்து, உழக் கெண்ணை வார்த்துத் தாளித்து உழக்காகக் காய்ச்சி, மூன்று நாள் கொடுக்கவும்.

பத்தியம் - வெள்ளாட்டுப்புக்கண்டம்
தேங்காய்ப்பால்
முருங்கைக்காய்
கூட்டவும்.

### 107. தாது விருத்திக்கு

(கவி)

நிலப்பனைக் கிழங்கி னோடு
நீர்முள்ளி வித்தும் கூட்டி
புலப்படு நெருஞ்சி விற்றுப்
பூனைக்கால் விதையி னோடு
இலப்படும் இவைகள் எல்லாம்
இடித்துத்தூள் பாலில் கொண்டால்
பலப்படும் விந்து என்று
பேசினோர் பெரியோர் தாமே!

### 108. குன்மகுடோரிச் செந்தூரம்

இரசம்
சுந்தகம்
நாவி
ஊசியிலைக் காந்தம்
அரப்பொடி
சாதிலிங்கம்
மனோசிலை

இவை சரிகூட்டி, தாழைச்சாறு விட்டு, 3 சாமமரைத்து, அடை தட்டிக், கற்பூரத்தில் வைத்துச் சூரியப்புடமாக வைத்துச் செந் தூரமாம்.

1 பணவெடை செந்தூரம், திரிகடுகுச் கசாயத்தில் தேன் சேர்த்துக் கொள்ளக், குன்மம், நீர்க்கோவை, அக்கினி மாந்தம், விஷபாண்டு, மகோதரம், சத்திகுன்மம், சரீரக் கடுப்பு, சர்வாங்க வலியும் தீரும்!

இச்சா பத்தியம்

### 109. வங்கமெழுகு

சாதிலிங்கம் வராகனெடை 10, தேசிச்சாறு, மேனிச்சாறு, தேன் முலைப்பால் இவற்றைத் தனித்தனி சுத்தி செய்து, வேப்பங்காய்ப் பால்படி 3 வாங்கி, ஞாயிற்றுக்கிழமை சூரிய உதயத்தில் சவுக்கமாய் மொழியடுப்பு கூட்டி, மேல் ஓடு புதுசாய் வைத்து, அதன்மேல் அப்பிரகத்தைப் போட்டு, லிங்கக்கட்டியை வைத்து, ஒரு சாதி விறகாலெரித்து மேற்படி பாலை 4 சாமம் சுறுக்கிட்டுக் கந்தகம் அரிதாரம், வகைக்கு வராகனெடை 5 குமரிச் சாற்றிலரைத்து லிங்கத்துக்குக் காயக்காய மூன்று தரம் பூசி உலர்த்திக் குழிவெட்டி, மணலிட்டுப் பரப்பிக் கட்டியை வைத்து, அதுமேலே ஓர் எருமுட்டை பரப்பி, நெருப்பிட்டு, ஆறவிட்டெடுத்து, இராத்திரிக்குச் சீயக்காய்த்

தண்ணீரில் போட்டுக் காய்ச்சி, விடிந்த பின்பு அந்தத் தண்ணீரை இறுத்துக் கொண்டு, செம்பரத்தம் பூ 100 கொண்டு வந்து, சூரிய உதயத்தில்......

(சுறுக்கிட்டு - வற்றக்காய்ச்சி)

## 110. வெள்வங்க பற்பம்

வெள்ளீயம் பலம் 4, எட்டுப் பாகமாய் உருக்கி, மாடைக்காசுக் கனத்தில் வில்லையாகத் தட்டி, சணப்பக் கோணியில் சுற்றுக் கொரு வில்லையாக வைத்துச் சுற்றி ஒரு பானைவாயைக் கட்டி, அதன் நிறைய ஆட்டெருக் கொட்டி, அதன் மேல் சுருட்டியதை வைத்து, அதன்மேல் எருக்கொட்டி, அதன்மேல் 5 எருவு வைத்துத் தீயிட்டுப், பாதி வெந்த போது கோழிரத்தமும், நல்லெண்ணையும் கலந்து, அதன்மேல் விட்டு 90 நாழிகை சென்றபின்பு, ஆறவிட்டு எடுத்துப் பணவெடை திப்பிலி, சூரணமும் சர்க்கரையும் கலந்ததில் கொடுக்க, வாதச்சரீரத்திற்குத் தேனிலும், பித்தச் சரீரத்திற்குத் திப்பிலிச் சூரணமும் தேன் கரிப்பான் சாறும் கலந்ததில் சிலேத்துமச் சரீரத்திற்கு இப்படியே கொடுக்கவும்.

சகலரோகத்திற்கும் விடத்தலையிலைச் சூரணமும் திப்பிலிச் சூரணமும் தேனுஞ் சேர்த்துக் கொடுக்கவும்.

மற்ற வியாதிகளுககுத் தேனிலிடவும்.

வாழைக்காயை நீக்கி, இச்சாபத்தியம்.

## 111. தாமிரபற்பம்

தாமிரத்தை ஈசலிறகுபோல் தட்டிச் சிறு சல்லித் துண்டுகளாக நறுக்கிச் செம்பிரச்சாற்றில் கடுக்காய்ச் சூரணமிட்டு மத்தித்து, மேற்படி சல்லியைப் போட்டுப் பிசறி, ரவியில் 3 நாள் வைத்தெடுத்துக் குப்பைமேனிச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்துக் கழுவிச் சிறுகலயத்தில் ஒரு பங்கு சூரணித்துக் கந்தகம் 2 பங்கும்

போட்டுக் கலந்து, நாயுருவிச் சாறுவிட்டு 3 நாள் ஊறப்போட்டு, 4ம் நாள் எடுத்து, வேறு நாயுருவிச் சாறுமட்டும் விட்டு, வாய் மூடிச் சீலைமண் செய்து கசபுடத்தில் $\frac{3}{4}$ பாகம் ஆட்டெரு கொட்டிக் கலயம் வைத்து மேலே எருகொட்டி, நெருப்பிட்டு, அதன்மேல் நெல்லுமி கொட்டி வெந்து குழியாறவிட்டு எடுத்துக் குன்மம் 5, மூலவாய்வு, கிராணிவாய்வு, உடம்பிலுள்ள வாய்வுகளுக் கெல்லாம் திரிகடுகுகளிலாவது, திரிபாலைகளிலாவது கொடுக்கத் தீரும்!

(ரவி - சூரியன்)

### 112. இரசவாதச் செந்தூரம்

இலிங்கம்

பங்கம்

சாதிலிங்கம்

வெள்வங்கம்

சிறு கண்ணாகம்

வீரம்

அயப்பொடி

வகைக்கு வராகனெடை 1, கருஊமத்தைச் சாற்றால் 2 சாமமரைத்து, கூத்தங்கருதும்பை 2 சாமமரைத்து, கருமத்தங்காய்க்குள் வைத்து மூடிச், சீலைமண் செய்து, 10 எருவிற் புடமிடச் செந்தூரமாம்!

$\frac{1}{4}$ பணவெடைச் செந்தூரத்தை வாய் உமிழ் நீரால் மத்தித்து, கலிபணத்துக்கும் பூசி, $1\frac{1}{2}$ எருவில் புடமிட்டு எடுக்க $7\frac{1}{2}$ மாற்றாகும்.

உருக்கிப்பாரு, கடைதோறும் $7\frac{1}{2}$ மாற்றே உளது!

(கருமத்தங்காய் - கருஊமத்தங்காய்; தொகுத்தல் விகாரம்; கலிபணம் - உலோகத்தால் ஆன ஒரு நாணயம்)

## 113. அப்பிரகச் செந்தூரம்

அப்பிரகத்தைப் பூசணிக்காய்ச் சாற்றிலரைத்து 20 புடமிடச் செந்தூரமாம்.

மாவிலங்கம் வேர்
நெருஞ்சிவேர்
பேராமுட்டிவேர்
சிறுபூளைவேர்

இவை கசாயமிட்டு, அமிர்த சர்க்கரை கூட்டிக் கொடுக்க மேகரோகம் தீரும்!

அப்பிரகம் பலம் 25, நிலப் பனைக்கிழங்கு 50 இவற்றை ஒன்றாகச் சேர்த்திடித்துக் கெட்டியான குகை செய்து, அதில் மருந்தைப் போட்டு மூடிச் சீலை செய்து, கொல்லனுலையில் வைத்து அழுகஊதி எடுக்கச் செந்தூரமாம்!

அனுபானமிட மேற்கண்டபடி.

(குகை - புடக்குகை; புடம் போடும் வார்ப்புப் பாண்டம்)

## 114. அரிதார பற்பம்

அரிதாரம்
சீனாக்காரம்

வகைக்குப் பலம்1; இவற்றை எருக்கம் பாலிலரைத்து, வில்லை தட்டி, உலர்த்தி, ஓட்டிலிட்டு மூடிச் சீலைமண் செய்து, குக்குடப் புடமிடப் பஸ்பமாகும்.

தாளகம் வராகனெடை 10
மிளகரணைச் சாறு படி $\frac{1}{4}$
பெரும்பூசணிக்காய்ச் சாறு படி 1

சுறுக்கிட்டு, மிளகரணைச் சாற்றையும் சுறுக்கிட்டு, மிளகரணை யிலை வேர்ப்பட்டையையும் அரைத்துக் கவசம் செய்து, மிள கரணைச்ச மூலம், சுட்டசாம்பல் கீழும் மேலும் . . . .

## மறைச்சொல் விளக்கப் பட்டியல்

| | மருந்துப் பொருள் | வேறு பெயர் |
|---|---|---|
| 1. | சுக்கு | வேர்க்கொம்பு<br>சுவண்டிக்கொம்பு |
| 2. | பெருங்காயம் | சோமன் |
| 3. | மலைமஞ்சள் | குளவிந்தம் |
| 4. | ஓமம் | அசமதாகம் |
| 5. | மிளகு | மலைமுனி |
| 6. | கிராம்பு | இலவங்கம் |
| 7. | சிறுநாகப்பூ | நாகக்கேசிரம் |
| 8. | அரிதாரம் | தாளகம்; தாரம்; காரணன் |
| 9. | நிமிளை | அஞ்சனக்கல் |
| 10. | கௌரி | ஈசனார் தேவிபாஷாணம் |
| 1. | வெள்ளை | சீனிப்பாஷாணம் |
| 12. | உப்பு | இலவணம் |
| 13. | குங்கிலியம் | சிதாரி |
| 14. | கற்பூரம் | சூடன் |
| 15. | ஈயம் | வங்கம் |
| 16. | வெள்ளீயம் | களகரசம் |
| 17. | இரும்பு | உலோகம் |
| 18. | இரும்புகிட்டம் | மாண்டுகம் |
| 19. | துத்தநாகம் | நாகம் |
| 20. | அமுக்குரா | அசுவகந்தி |
| 21. | கோரைக்கிழங்கு | முத்தக்காசு |
| 22. | கொடுவேலி | சித்திரமூலம் |
| 23. | விரியமரம் | நறுவிளை |

| | | |
|---|---|---|
| 24. | சித்தகத்தி | செம்பை |
| 25. | மஞ்சனத்தி | உள்ளுள்ளி |
| 26. | சிறுசெந்தொட்டி | சிறுகாஞ்சோறி |
| 27. | கோழி | குக்குடம்; ஞானி |
| 28. | பன்றி | வராகம் |
| 29. | தெகஷணம் | அகத்தி |
| 30. | எலுமிச்சை | தேசிகாணி |
| 31. | நெல்லிக்காய் | கையல்கனி |
| 32. | கரிப்பான் | கையாந்தகரை; கரிசலாங்கண்ணி |
| 33. | பொன்னாங்கண்ணி | கொடுப்பை |
| 34. | கிழவை | சாலை |
| 35. | ஆமணக்கு | ஓரண்டம் |
| 36. | குறிஞ்சாயம் | குரண்டம் |
| 37. | வெள்வெங்காயம் | உள்ளிம்பூடு |
| 38. | கோழிமுட்டை | அண்டம் |
| 39. | நீலி | அவிரி |
| 40. | சிந்திச்சர்க்கரை | அமுதசர்க்கரை |
| 41. | அதிமதுரம் | சிடைகளத்தி |
| 42. | காட்டாமணக்கு | எரியாலை |
| 43. | குட்டித்தக்காளி | தக்காளி |
| 44. | மிளகுத்தக்காளி | மணித்தக்காளி |
| 45. | ஊமத்தை | மதமத்தை |
| 46. | முக்கரைச்சாரணை | சாரடை; முகிழந்தான் |
| 47. | நாய்க்கொட்டான் | நஞ்சப்பு கழித்தான் |

48. சிறியாநங்கை முலையிலாக்கன்னி
49. வசம்பு இராச்சொல்லான்
50. வெற்றிலை இராவிலை; மடியில் குருவி
51. பன்றிக்கொம்பு ஏனக்கொம்பு
52. ஆமை கூன்; கூர்மம்
53. படலம் வேம்பாடப்பட்டை
54. நெற்பொரி அங்கோலம்
55. நந்தியாவட்டம் வட்டுச்சிலம்
56. நாவி விஷம்
57. ஓமம் ஓங்கணம்
58. காந்தம் காணம்
59. அமுக்குரா விப்புருதிநாயகன்
60. சாதிலிங்கம் சாயிந்தன்
61. தலைச்சுருளி கருடக்கொடி
62. கழற்சி களக்கொடி
63. எலியால் சாசமன்னி
64. கொளிஞ்சி காவளை
65. அவரை குடைமேலழி
66. முள்குரண்டி முப்புரமெரித்தான்
67. அகத்தி தட்சிணமுனி
68. பிடா இருவேலி
69. கள்ளிப்பிள்ளை நீலஞ்சோதி
70. ஆனைவணங்கி துலுக்கி
71. சிறுகீரை சிவிலி
72. ஆல் பவமத்திக்கோளி
73. நிலப்பனைக்கிழங்கு வராகிக்கிழங்கு
74. மலைப்புளிச்சி காரகொங்கி

| | | |
|---|---|---|
| 75. | அரிதாரம் | கார்வண்ணன் தாரம் |
| 76. | சாதிலிங்கம் | கந்ததாபரம் |
| 77. | காட்டரிதாரம்(?) | தாளகம் |
| 78. | அதிமதுரம் | அடியுமுடியோமம் |
| 79. | பெருங்காயம் | இராமாட்டுமுடி |
| 80. | கஸ்தூரி | தாக்கோலம்; காக்கோலம் |
| 81. | மலைப்பச்சிலை | பச்சிலை |
| 82. | சாயவேர் | இம்பூறல் |
| 83. | சவுரிக்கொடி | மூதியார்கூந்தல் |
| 84. | தலைவிரிச்சான் | பேய்க்கொம்மட்டி |
| 85. | சிந்திக்கொடி | ஆகாயமூலி |
| 86. | கொல்லங்கோவை | ஆகாயக்கருடன்; கடைக்கொடி |
| 87. | குளிர்தாமரை | அந்தரத்தாமரை |
| 88. | புகையூரல் | வரிச்சவோடி; ஒட்டறை |
| 89. | வேலிப்பருத்தி | உத்தமதாளி |
| 90. | முள்ளிக்காய் | வழுதுலைக்காய் |
| 91. | ஆதொண்டை | காத்தோட்டி |
| 92. | வாதமடக்கி | தழுதாழை |
| 93. | குப்பைமேனி | ஊருடன்முதலி |
| 94. | தும்பை | முடிமேல்முடி |
| 95. | நாங்கூழ்ப்புழு | பூநாகம்; நிலயாசனன் |
| 96. | மயிலிறகு | பீலி; புத்தகம் |
| 97. | தண்ணீர்விட்டான் | சதாவேரி |
| 98. | வெட்டிவேர் | இருவேலி |
| 99. | ஆடுதின்னாப்பாளை | பங்கம்பாளை |

| | | |
|---|---|---|
| 100. | அவரை | கோடைக்குவாடல் |
| 101. | தம்பலப்பூச்சி | இந்திரகோபம்; நடனார்தம்பலம் |
| 102. | மூக்குத்திச் செடி | கூதன்குதம்பை |
| 103. | வாழை | தாலையக்கொன்றான் |
| 104. | மாமரம் | குதிரை; கானக்குதிரை |
| 105. | கோவை | குராமரம் |
| 106. | தேன் | குறத்தி முலைப்பால் |
| 107. | ஆடாதொடை | தோகை; அஷ்டாலப்புரை |
| 108. | கருஞ்சூரை | செங்கத்தாரி |
| 109. | தாமரை | பதுமம்; கஞ்சம் |
| 110. | பேய்த்தும்பை | பேய்மிரட்டி |
| 111. | அம்மான்பச்சரிசி | சித்திரப்பாலடை |
| 112. | கண்ணுலவிப்பூச்செடி | கார்த்திகைக் கிழங்கு; வெந்தோன்றி |
| 113. | அவரை | கயலோகம் |
| 114. | காட்டுச்சீரகம் | சன்னிநாயகம் |
| 115. | பேய்க்கும்மட்டி | கொந்தழை |
| 116. | கச்சத்திராய் | கம்மந்திராய் |
| 117. | துளசி | சிங்கப்பெருமாள் |
| 118. | பொன்முசுட்டை | மலைதாங்கி |
| 119. | தலைசுருளி | ஈசுரமூலி |
| 120. | கிரந்திநாயகம் | நீட்டினவிரல்தரித்தான் |
| 121. | தேள்கொடுக்குச்செடி | சுடுகாடுமீட்டான் |
| 122. | கூகைநீறு | வெய்நீறு |
| 123. | மூங்கிலரிசி | பண்ணைவிதம் |
| 124. | வெள்ளி | சிவதடி |

| | | |
|---|---|---|
| 125. | துரிசு | நீலம் |
| 126. | தாழை | படைமடக்கி |
| 127. | காட்டுக்கருணை | கரண்டை |
| 128. | முல்லை | சித்தனைமல்லிகை |
| 129. | பொரிகாரை | சிறுபுள்ளடி |
| 130. | மின்னி | வயிரவன் |
| 131. | பிரண்டை | கலக்கிராணி |
| 132. | வேலிப்பருத்தி | தொழுமருவி |
| 133. | அழிஞ்சி | களுக்காணி |
| 134. | விழி | உருவாரசமட்டி |
| 135. | பெருங்காயம் | மடிமீங்கு |
| 136. | கஸ்தூரிமஞ்சள் | தக்கோலம்; கச்சோலம் |
| 137. | கள்ளி | காட்டெருமை |
| 138. | ஊசிக்காந்தம் | காரமம் |
| 139. | தான்றிக்காய் | கல்வரைத்தான் |
| 140. | கடுக்காய் | நாகேசுரம் |
| 141. | ஆனைத்திப்பிலி | காரி |
| 142. | மிளகு | வேந்தன் |
| 143. | சேங்கொட்டை | சுரி |
| 144. | மராமரம் | கொடி |
| 145. | பொன்னாவரை | அத்தனார்சுடலை |
| 146. | விடத்தலை | அரியவாகன் |
| 147. | கையாந்தகரை | தும்பிக்கை |
| 148. | குப்பைமேனி | திருமேனி |
| 149. | சிறுசெருப்படை | பாதம் |
| 150. | வெட்டிவேர் | இருவேலி |

| | | |
|---|---|---|
| 151. | கவுதும்பை | பேய்மருட்டி |
| 152. | வடக்கிலுகிலுப்பை | நரிவெருட்டி |
| 153. | நீர்வள்ளிக்கிழங்கு | அமுதசாலைக்கிழங்கு |
| 154. | நீர்முள்ளி | வீராளிவீரன் |
| 155. | சித்தாமல்லி | குறுந்துரட்டி |
| 156. | நாயுருவி | வாலி |
| 157. | குறுக்குச்செடி | பிரமராட்சசி |
| 158. | கொடிக்கள்ளி | பாச்சான் |
| 159. | அருகின்வேர் | பாதாளமூலி |
| 160. | மாவிலங்கு | முப்புரமெரித்தான் |
| 161. | பல்லவராயன் | வெள்ளுள்ளி |
| 162. | வட்டக்கிலுகிலுப்பை | பேசும்பெருமாள் |
| 163. | முருங்கை | ஊருடன்முதலை |



# 2. வைத்தியச் சாத்திரம்

ஸ்ரீரஸ்து

## ஸ்ரீமத் பண்டிதர்களிடத்தில் கேட்டுக்கொண்ட வைத்திய முதலிய தொழில் முறைகள் - 1937

### 1. கோயமுத்தூர்ச் சாமியார் கண் ரோகங்களுக்கு

கடல் நுரை, சீனாக்கற்கண்டு, நந்தியாவட்டம் இம்மூன்றும் சரியெடை சேர்த்து, நந்தியாவட்டப் பூச்சாற்றிலரைத்துக் கடலைப் பிரமாணம் மாத்திரை செய்துலர்த்திக் கொண்டு, கண்ணில் படலம், சிவப்பு, துர்மாமிச வளர்ச்சி, வெள்ளைவலி வகைக்கு ஒரு மாத்திரை வெள்ளித் துணியில் தளர முடிந்து, முலைப்பாலி லூறவைத்துப் பிழியவும்.

### 2. ஐவர்சாமியார் வெங். முத்துசாமி நாயகர் கண் ரோகங்களுக்கு

பச்சைக் கற்பூரத்தைப் பசுவின் வெண்ணையும், புளியவிலைச் சாறும் சேர்த்து, வெண்கல வட்டிலில் செம்புக்குளவியால் மைபோல அரைத்து வைத்துக்கொண்டு, கடுகளவு கண்ணிற் போடவும்.

#### மேற்படியார்

மேற்படி ரோகங்களுக்குக் குதிரைக் குளம்பிலைச் சாறும், நல்லெண்ணையும் சரிகூட்டி, மெழுகுப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு, நாயுருவிச் சாம்பலும் வாழைச்சருக்குச் சாம்பலும் சரிகூட்டித், தண்ணீரிற் கலக்கித் திரி போட்டு, அதில் வடிகிற நீரை வேறாக வைத்துக்கொண்டு, முழுகுநாள் மேற்படி எண்ணை யுடன் மேற்படி நீர் கொஞ்சம் சேர்த்து முழுகி, மறுநாள் மிளகைப் பாலிலரைத்துத் தலைக்குத் தேய்த்து முழுகவும்.

இப்படி, 5, 6 நாள் முழுக்கு முழுகினபின்; வாரத்துக் கொருமுறை முழுகிவரக், கண் மங்கல், படலம் வகை தீரும்!

(புளியவிலை - புளிய+இலை)

### 3. மேற்படியார்
### வைத்தியம், ஒருதலைவலி மேகத்திற்கு

கொடிவேலி வேரும், சாரணை வேரும் சரிகூட்டி, நல்லெண் ணையிலிட்டுக் காய்ச்சி, முழுகி வரவும்.

### 4. மேற்படியார்
### மூல முளைக்கு

வெள்வங்கமும், இரசமும் சரிகூட்டிக், கலுவத்தில் மூன்றுநாள் வைத்தால் சாம்பலாகிவிடும்.

அதில் ஒரு சிட்டிகைத் தூளைக் கல்லுரலில் போட்டு. மூல ரோகியை மேலே உட்காரவைக்கவும்.

இப்படி, 3, 4 நாள் புகை மூலத்தில் பட்டால், கொப்பளித்து மூலமுளை விழுந்துவிடும்!

பின்பு, கோவையிலையில் விளக்கெண்ணை பூசிப், புண்மேல் வைத்துக் கட்டப் புண்ணாறிவிடும்!

(மூலரோகி - மூலநோய் உள்ளவர்)

### 5. மேற்படியார்
### வெள்ளை வெட்டைக்கு

புளிப்பு மாமரப்பட்டைச் சாறும், பசுவின் பாலும் சரிகூட்டி, யதில் சிறு கழற்சிக் காயளவு சுண்ணாம்பு கரைத்து, மூன்றுநாள் காலையில் சாப்பிடத் தீரும்!

கைகண்டது.

### 6. மேற்படியார்
### பாண்டு, காமாலை, கவுசைக்கு

வெண்காரத்தைப் பொரித்து, விளக்கெண்ணையைக் காய்ச்சி யதில்போட்டுக் கிளறிவர, மெழுகாகும்.

அதில் குன்றியளவு சாப்பிட்டுவர, மலசலங்கள் கழிந்து தீரும்!

### 7. மேற்படியார்
### வாய்வு, வயிற்று வலிக்கு

வெடியுப்பு பலம் 2, அன்னபேதி பலம் 1, கலுவத்திலிட்டுப் புட்டி வாலையில் திராவகம் வாங்கி, ஆளுக்குத் தக்கபடி 1 துளி முதல் 6 துளி வரை கொடுக்கவும்.

பத்தியமில்லை.

### 8. மேற்படியார்
### தாமிரப்பற்பம்

தாமிரத் தகட்டுக்குக் கறியுப்பை யரைத்துப் பூசிச், சூட்டில் கரிபோட்டுச் சிவக்க ஊதி யெடுத் தாறவிட்டுத் தட்டினால், கிட்டம் விழும்!

இப்படி 4 தபா செய்தால், சேர்ந்த கிட்டத்தை அரைத்துக் கொண்டு, க்ஷயம், காசம், பொருமலுக்குத் தேன், நெய், குப்பை மேனிச் சாற்றில் 1 பணவெடை கொடுக்கவும்

### 9. மேற்படியார்
### வெள்வங்கப் பற்மம்

வெள்வங்கத் தகட்டிற்குத் துடுப்பாலை மரப்பாலைப் பூசி, மேற்படி மரயிலையை யரைத்து, மாங்காயளவு கவசங்கட்டிச் சிலைமண் செய்து, தேனிராட்டால் பெரும்பூசணிக்காயளவு

பற்றாடை செய்து, மேலே வைக்கோல் போட்டுத், தீ வைத்து 2 நாளுறவிட்டு எடுக்கப் பற்பமாகும்!

பசுவெண்ணையில் 1 பணவெடை கொடுக்க, நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு, வெள்ளை வெட்டை வகை தீரும்!

துடுப்பாலை யென்பது, நீண்ட இலையும் இரட்டையாகப் பாச்சாணைப் போலக் காயுமாக இருக்கும்.

## 10. மேற்படியார்
## கருவங்கப் பற்பம்

வன்னொச்சியிலையைக் கோணிரட்டிற் பரப்பி, அதில் கருவங்கத்தகட்டைப் பொடியாய் நறுக்கிப் பரப்பிச் சுருட்டிக் கட்டி, மண்பூசிக், கஜபுடமிடப் பற்பமாகும்.

கருங்குஷ்டம்
பெரும்பாடு
சோகை
மேகரோகம்

வகைக்குப் பணவெடை, தேன், வெண்ணைகளில் கொடுக்கவும்.

## 11. மேற்படியார்
## கர்ப்ப ரோகங்களுக்கு

விழும்பியிலைச் சாறு, பசுவின்பால் வகைக்குப் படி $\frac{1}{4}$ கலந்து, தூரமான நாளில் ஸ்நானஞ் செய்து, ஈரத்தலையாய் இருக்கும் போதே சாப்பிடக், கர்ப்பமுண்டாகும்!

கைகண்டது.

## 12. மேற்படியார்
## பீனிச ரோகங்களுக்கு

[illegible], [illegible] [illegible] [illegible]
பழச்சாறு படி $\frac{1}{4}$, எலுமிச்சம் பழச்சாறு...3 நாள்...போய்[illegible]

இரவிப்புடம் வைத்து, நிழலிலுலர்த்தி, ஏழாவது நாளில் மேற்படி சாற்றிலரைத்து, அரைப்படி நல்லெண்ணையிவிட்டுக் காய்ச்சிக் கொண்டு வாரத்திற்கிருமுறை முழுகி வரவும்.

கை கண்டது.

(இரவி-ஞாயிறு; இரவிப்புடம்-வெயிலில் காய வைத்தல்)

## 13. வண்ணாரப்பட்டி சா. ராமசாமியாச்சாரி [வெட்டுக் காயத்திற்கு]

நரையாத தலைமயிரைச், சீயக்காயரைத்ததில் போட்டுக் கசக்கித், தண்ணீரில் கழுவி யுலர்த்தி, நல்லெண்ணையிவிட்டுக் காய்ச்சி, மயிர் கரைந்து பின் வடித்துக் கொண்டு, வெட்டுக்காய முதலிய சகல ரணங்களுக்கும் பூசிவரப் புண்ணாறும்!

கை கண்டது.

## 14. அமரம் பூண்டி வாத்தியார் இருமலுக்கு

மிளகு
கிராம்பு
வகைக்குப் பலம் 1
சுக்கு சித்தரத்தை
பீதரோகிணி
கடுகுரோகிணி
வெள்ளை மிளகு
வால்மிளகு
திப்பிலி
வகைக்குப் பலம் $\frac{1}{2}$

இவற்றைச் சூரணித்து, வேலிபருத்திச் சாறுவிட்டுப் பிசைந்து, கருப்புக்கட்டி $1\frac{1}{2}$ பலம் சேர்த்துப் பசுவின் நெய் கூட்டிப் பிசைந்து சாப்பிடவும்.

### 15. மேற்படியார்
### கர்ப்பத்திற்கு

விழும்பி
நொச்சி
புளி
வேம்பு
முடக்கொற்றான்

இவற்றினிலை வகைக்குப் பிடி 1 இடித்துச் சாறு வாங்கி, எருமை மோர் கலந்து, இருப்புப்படியில் வைத்துச் சூரிய நமஸ்காரம் செய்து, வாசலுக்குத் தூரமான இரண்டாம் நாள் முதல் நாலு நாளுக்குச் சாப்பிடவும்.

(இவற்றினிலை = இவற்றின் + இலை;
சாறுவாங்கி - சாறு எடுத்து)

### 16. மேற்படியார்
### பெண் திரள

மாவலிங்கப்பட்டை, ஈரவெங்காயம், மிளகு இம்மூன்றும் சமனாக அரைத்துக் கொட்டைப் பாக்களவு 3 நாள் கொடுக்கவும்.

### 17. மேற்படியார்
### காதில் சீழ் வடிதலுக்கு

வில்வப்பழச் சதையை நல்லெண்ணையில் போட்டுக் காதில் விடவும்.

### 18. மேற்படியார்
### பாம்புக் கடிக்கு

வேப்பம்புண்ணாக்கு பலம் 10, சதுரக்கள்ளிப்பட்டையால் குழித்தைல மிறக்கி, எட்டி விதை பக்காப்படி 2 மேற்படி பட்டையால் குழித்தைல மிறக்கி, இரண்டையும் எட்டிக் குச்சியால்

மத்தித்து, எருமைக் கொம்புச் சிமிழில் வைத்துக்கொண்டு, விஷத் தாலிறந்தவனுக்குக் கொஞ்சம் தண்ணீர் கலந்து, கரண்டிக்காம்பில் நெம்பியாவது உள்ளே செலுத்தவும்.

(எருமைக் கொம்புச் சிமிழ் — எருமைக் கொம்பில் செய்யப் சிமிழ்)

### 19. மேற்படியார் சன்னிக்கு

குப்பைமேனி இலையும், நெய்க்கொட்டான் பழமும் சேர்த்துத் தட்டிச், சாறுபிழிந்து, நாசியில் நசியமிடவும்.

### 20. மேற்படியார் விக்கலுக்கு

இராய்மாவும், மஞ்சள் பொடியும் சமனாகச் சேர்த்துப் புகை பிடிக்கவும்.

### 21. மேற்படியார் முகச்சன்னிக்கு

மாடப்புறாவின் குழம்பை வைதத்துச் சாப்பிடவும்.

### 22. மேற்படியார் வயிற்று வலிக்கு

வெள்ளருகின் வேர்
சீரகம்
உப்பு

இவற்றைச் சமமாய்ச் சேர்த்து, அரைத்து, வெந்நீரில் சாப்பிடவும்.

### 23. மேற்படியார்
### நரித்தலை வாதத்திற்கு

முற்றின தேங்காய்க்குள் நீரை வடித்துத் திருகுகள்ளிப் பாலும், $\frac{1}{2}$ பலம் கடுகும் போட்டுக், காட்டெருவில் வெளிப்புடமிட்டு, ஓட்டுடன் அரைத்துப் பற்றிடவும்.

### 24. மேற்படியார்
### பழனிக் கருப்பணத்தேவன்

மேகப்பட்டை, சொறி முதலியவைகளுக்குக் குப்பைக் கீரையென்னும் கிரந்திநாயகத்தின் இலைச்சாற்றைத் தடவவும்.

### 25. மேற்படியார்
### குழந்தைப் பிணிகளுக்கு

பச்சிலை
பூலாங்கிழங்கு
கஸ்தூரி மஞ்சள்
திருநீற்றுப்பச்சை இலை
கழுதைவிட்டை

இவைகளை யரைத்து, வளையிட்டு மிஞ்சிய மருந்தை இரண்டு பொட்டணங்கட்டி, மாறுகால் மாறுகையில் கட்டவும்.

### 26. ஆத்தூர் முத்துச்சாமிக் கவுண்டர்
### பாம்புக் கடிக்கு

எருக்கங் கொழுந்திலிருக்கிற முளங்கை மேற்படி பாலில் பிசைந்து, மிளகளவு குளிகை செய்து, கருப்புக் கட்டிக்குள் வைத்துக் கொடுக்கவும்.

பத்தியமில்லை.

### 27. மேற்படியார்
### வயிற்று வலிக்கு

எருக்கம் பழுப்பிலையும், வெள்வெங்காயமும் தட்டிப் பிழிந்து நாலைந்து துளி சாப்பிடவும்.

### 28. மஞ்சநாயக்கன்பட்டித்
### தம்பிகாளியப்பக் கவுண்டன்
### வெள்ளிப்பற்பம்

சரிகை வெள்ளியை லேசான தகட்டாயிடித்துச், சுத்தமான இரும்பு வால்கிண்ணத்திலிட்டு. உலையில் வைத்து, வால்கிண்ணம் சிவக்கக் காய்ச்சி யெடுத்து அதில், சிறுசெருப்படைச் சாற்றை விட்டு, ஆவி வெளியிற்போகாமல் ஓடு மூடி, ஓட்டின் சந்திற்குச் சாணி கொண்டு மூடி, நன்றாயாறியபின் யெடுக்கப் பற்பமாகும்!

### 29. மேற்படியார்
### தாமிரபற்பம்

சேராங்கொட்டையும், கருநொச்சி யிலையும், சரியெடை கூட்டி, வெள்ளெருக்கன் பால் விட்டரைத்துச், செம்புத் தகட்டிற்குப் பூசி யுலர்த்தி, மேற்படி தகட்டைச் சுருட்டி, மேலே துணி சுற்றி, மண்சாந்து பூசி, யுலர்த்தி, கெஜபுடமிட்டெடுத்து, வெள்ளெருக்கம் பாலிலரைத்து, ஐம்பது எருவில் புடமிடப் பற்பமாம்.

### 30. மேற்படியார்
### வெடியுப்பு சுண்ணம்

பாறையுப்பைப் பொடித்து, ஓட்டிலிட்டு, அதன்மேல் வெடியுப்பைப் பொடித்து வைத்து, அதன்மேல் மேற்படி பாறையுப்பைப்

பொடித்துப் போட்டு, அடுப்பேற்றி எரித்து, இரும்புத் துடுப்பால் கிளறிவரப் பொரிந்து சுண்ணமாகும்!

மேற்படி சுண்ணத்தை 1, 2 குன்றியெடை தேனில், வயிற்று வலி வகைக்குக் கொடுக்கவும்.

### 31. சின்னரம்மாள் சூதகக் கட்டுக்கு

கொள் படி $\frac{1}{4}$, தண்ணீர் படி 1 இல் இட்டு, நன்றாய் வேக வைத்துக், காற்படி கசாய மிறுத்துச் சூடாயிருக்கும்போது, கருப்புக் கட்டி சீவிப்போட்டு, எட்டொன்பது எருக்கங் கொழுந்தும் போட்டு ஆறவிட்டு, அரைக்காற் படி சகாயம் காலையில் வெறும் வயிற்றில் சாப்பிட மூன்று மாதத்திற்குள் பட்ட கற்பம் கரைந்து விழும்!

### 32. பழனி மலையாளி தேள்கடிக்கு

நாட்டுச்சூடன், நீலத்துருசு வகைக்குப் பலம் 1 பொடித்துச் சேர்த்து, இரும்புச் சட்டியிலிட்டுக் காய்ச்சி, யுருக்கிச் சிறுவில்லைகளாக 'அச்சில் வார்த்து, ஆறியபின் யெடுத்துக் கொண்டு, கொட்டு வாயில் வைக்கவும்.

(கொட்டுவாயில் - தேள் கொட்டிய அந்த இடத்தில்)

### 33. மேற்படியார் அமிர்தாஞ்சனம்

ஓமச்சத்து
பெப்பர்மெண்ட் உப்பு
பச்சைக் கற்பூரம்
நாட்டுச் சூடன்
வகைக்குக் கால்ரூபாய் எடை
வெள்ளை மெழுகு

தேங்காயெண்ணை

வகைக்கு எட்டு ரூபாய் எடை

இவைகளைச சேர்த்து, இரும்புச் சட்டியிலிட்டுக் காய்ச்சி, யுருக்கி யிடிக்கி, வெள்ளை வாஸலைன் அல்லது சிரிஸ்துச் சேர்த்துக் கலக்கிக் கொண்டிருக்க வெண்ணைபோலாகும் பருவத்தில் எடுத்துக் கொண்டு உபயோக்கிவும்.

## 34. மேற்படியார் பசுவினெய்

தேங்காய் எண்ணைக்குச் சமன் பசுவின்பால் சேர்த்துக் காய்ச்சி, நீர் சுண்டிய பின்பு இறக்கிக் கொள்ளவும்.

## 35. மேற்படியார் வெள்ளை வெட்டைக்கு

அதிமதுரம் பங்கு 1, வெள்ளைக் குங்கிலியம் பங்கு 2 சூரணித்து, வஸ்திரகாயம் செய்து, ஒரு சிட்டிகை நல்லெண்ணையிற் குழப்பி 3 நேரம் சாப்பிடவும்

## 36. மேற்படியார் வியாதிக்கு

பவளப் பற்பத்தை இளநீரில் சாப்பிடவும் .33

பலகரையை எலுமிச்சஞ்சாற்றிலூறவைத்து, இரசத்தை மட்டும் சாப்பிடவும்.

## 37. மேற்படியார் நீர்க்கடுப்பிற்கு

கருவேலம் பட்டைச் சூரணத்தை விருப்பச்சீப் பழத்தில் போட்டுப் பிசைந்து, பிழிந்து சாப்பிடவும்.

## 38. மேற்படியார் தலைவலிக்கு

சுற்றாழைவேர்ச் சாற்றில் குருமிளகை யரைத்து, விளக் கெண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலையில் பற்றுப் போடவும்.

## 39. மேற்படியார் க்ஷயத்துக்குத் தாளகமெழுகு

தாளத்திற்குச் சரியெடை கந்தகம், தாளகத்தை இரும்புக் கரண்டி வைத்து நெய்யில் காய்ச்சும் போது, கெந்தகத்தை பொடித்துத் தூவி இரும்புக் கம்பியால் கிண்டிக் கொண்டு வர மெழுகாகும்!

சுக்கு, மிளகு, திப்பிலி, அதிவிடையம் இவைகளைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து, சிட்டிகை யளவில் தேன் சேர்த்து, 1 அரிசி யெடை மெழுகு கூட்டி, இருநேரம் 6, 7 நாள் சாப்பிடவும்.

## 40. மேற்படியார் சன்னிச் சுரத்திற்கு

வீரம் பலம் ½ இதை வெள்ளாட்டுக் கறிக்குள் வைத்துத் தந்திக் கம்பியால் கட்டி இரண்டெருவில் புடமிட்டு, வேலிப்பருத்திச் சாற்றில் 4 சாமம் அரைத்துப் பயறளவு மாத்திரை செய்து, அனுபானமறிந்து கொடுக்கவும்.

## 41. மேற்படியார் சுவாசகாசத்திற்கு

ஆற்றுநண்டோட்டை யரைத்துத் தாளகத்தை வைத்துச் சிலைமண் செய்து, 15 எருவில் புடமிட்டு அரிசியெடை கொடுக்கவும்.

## 42. மேற்படியார் கண்மேக நீர் வகைக்கு

பீதரோகிணியை, நந்தியாவட்டப் பூச்சாறு, எலுமிச்சம்சாறு, பனம்பட்டைச்சாறு இம்மூன்றிலும் ஒவ்வொரு சாமமரைத்து, மாத்திரை செய்து, புழு வெட்டுக்கு எலுமிச்சம் பழச்சாற்றிலும், கண் மங்கலுக்கு முலைப்பாலிலும், கண் சிவப்பிற்குத் தண்ணீரிலு மரைத்துப் போடவும்!

கைகண்டது.

## 43. கர்ப்ப மழிப்பதற்கு நேரட்டிலிருந்து எடுத்தெழுதியது மானூர் மணியக்காரர்

| | |
|---|---|
| சணப்பின் விதை படி | 1/16 |
| கருஞ்சீரகம் வராகனெடை | 1 |
| கடுகு வராகனெடை | 1 |
| சிகைக்காய் வராகனெடை | 1 |
| எருக்கிலைமொட்டுப்பூ வராகனெடை | 3 |
| புகையூரல் | படி 1/16 |

இவைகளை ஒரு படி தண்ணீரிற் போட்டு, நன்றாய் வெந்தபின், பிசைந்திறுத்துத் தெளிவான பின்பு பனைக் கருப்புக்கட்டி சீவிப் போட்டாவது. கடித்துக் கொண்டாவது சாப்பிடவும்.

3 அல்லது 5 நாளில், தலைவலி, வயிற்றுவலி அதிகமானால்

கச்சுத்தராத்தழை
திரிகடுகு
சதகுப்பை
வால்மிளகு

இவைகளை யரைத்துப் பனைவெல்லம் கூடச் சேர்த்து, குழம்புப் பதமாய்க் காய்ச்சிச், சுடச் சுடச் சாப்பிட, உடம்பு சுத்தமாகும்.

(கச்சு - இளம்)

### 44. பழனி மலையாளி கற்பூரத் தைலம்

குரங்கு மார்க்குச் சீமைத்தண்ணியில், கற்பூரம் பொடித்துப் போட்டுக் கலக்கிக் கொள்ளவும்.

மேற்படி ஓமத்திராவகக் காயத்திற்கு ஓமத்திராவகத்தில் சிவப்பு ஓமஉப்பைப் பொடித்துப் போட்டுக் கலக்கிக் கொள்ளவும்.

### 45. மேற்படி

ஓம உப்பு
புகையிலைச்சாறு
கற்பூரம்
பச்சைக்கற்பூரம்

சரியெடை கலந்துகொள்ள வேண்டியது.

### 46 கர்ப்பமழிக்க

லரிக்கும்மட்டி வேரை யோனிக்குள் ஒருநாள் வைத்திருக்கக் கர்ப்ப மழியும்!

### 47. கே. வெங்கடராஜு வாலைசமுத்திரம் - உபாத்தியாயம் ஒரு தலைவலிக்கு

நொச்சியிலை ஏழு, மிளகு ஐந்து இவ்விரண்டையும் அரைத்துப் பொட்டணங்கட்டி மூக்கில் நசியஞ் செய்யத் தலைவலி தீரும்!

### 48. சுகச்சன்னிக்கு

எருக்கிலைச் செடியில் சிறு மொட்டுப் பூ ஐந்து அல்லது ஏழும், அதற்குச் சமனெடை கிராம்பும் சேர்த்து அரைத்து, உருண்டை செய்து, மூன்று நாள் சாப்பிடச் சன்னி தீரும்!

## 49. வெண்குட்டம், கருங்குட்டம், குறைநோய்வு சகலத்துக்கும் (இரகசியம்)

இரும்பு வள்ளத்தில், கழுதை இலத்தியைப் போட்டு ஆன்பீகா(?) சிறுநீர் விட்டு நாற்பது நாள் ஊறவைத்து, வீசம்படி வீதம் 5 நேரம் காலையில் மாத்திரம் (பாலுஞ்சோற்றுடன்) கொடுத்து, 12-ம் நாள் பத்தியமுறித்து, 48 நாள் இச்சாபத்தியமா யிருக்கவும்.

வீட்டுக்குத் தூரமாகாத பெண்களுக்குப் பச்சை மூங்கிலின் மேற்புரணி வராகனெடை 1, பூநீறு வராகனெடை 1, சர்க்கரை வராகனெடை 1-இம் மூன்றும் அரைத்து மூன்றுவேளை கொடுக்க, குருதியதிகங் கண்டால், தேங்காய்ப் பால் கொடுக்கவும்.

## 50. செவிட்டுக்கு

கோழிமுட்டை மஞ்சள் கரு, தைலமிறங்கும்போது, வீழியிலைச் சாறுவிட்டுக் காய்ச்சிக் காதில் விட்டு வரவும்.

## 51. க்ஷயம், காசம், இருமல் வகைக்கு எருக்கிலையுப்பு

எருக்கிலையில் பசுவ்நெய் பூசி, அதில் மேல் உப்பைப் பொடித்துத் தடவிப் புதுப்பாண்டத்திலிட்டு, ஓடிமூடிச் சீலைமண் செய்து புடமிட்டுக் கொள்ளவும்.

## 52. ஓரண்ட வாயுவுக்கு

எருக்கின்வேர்ப் பட்டை பாக்களவு வெற்றிலையில் மடித்து, 3 நாள் 3 வேளை கொடுத்து பசும்பால் வெந்நீர், சாதம் - பத்தியம் 5-ஆம் நாள், எல்லாம் கூட்டிக் கொள்ளவும்.

### 53. சூதகக் கட்டிக்கு

பூநீற்றை வேலிப்பருத்திச் சாற்றிலரைத்து, வில்லைதட்டிக் காயவைத்துச் சூரியப்புடம் வைத்துப் பொடித்துப் பணவெடை கொடுக்கவும்.

### 54. வாந்திக்கு

வெடியுப்பு பலம் 2
அன்னபேதி பலம் 1

இவ்விரண்டையும் வெவ்வேறாகப் பொடித்து, இரும்புச் சட்டியில் மாறிமாறிச் சுருக்குக் கொடுத்துப் பூமியிலூற்றி ஆறியபின், எலுமிச்சம்பழச் சாற்றால் 3 சாமமரைத்துலர்த்திப் பொடித்துக் காலணாயெடை இஞ்சி ரசத்திலாவது வெந்நீரிலாவது கொடுக்க வாந்தி நிற்கும்!

### 55. வாடிப்பட்டி வையனாச்சாரி மகன் இராமசாமி யாச்சாரி-ருதுவாக

சிறுகுமிட்டான் சாறு துட்டெடை வெள்ளாட்டுப் பாலில் 3 நாள் கொடுக்க, ருதுவாகாத பெண் ருதுவாகும்!

### 56. காசம், இருமல் கபக்கட்டுக்கு

திருநீற்றுப்பச்சைச் சாறு வீசம்படி வீதம் 3 நாள் கொடுக்கக் கபம், கோழை, வாந்தியாகும்!

### 57. நரம்புச் சிலந்திக்கு

அமுக்குர வேர், கருணைவேர், இஞ்சிவேர் - இம்மூன்றையும் அரைத்து, அவித்து எடுத்துப் புண்மேல் வைத்துக் கட்ட மூன்று நாளில் தீரும்!

### 58. பெருவயிறு வீக்கத்துக்கு

சாரணைக் கொழுந்து, உப்பு சமமாகப் பசுவின் பாலிலரைத்துச் சாப்பிடப், பேதியாகும்!

உப்பில்லாக் கஞ்சி சாப்பிடவும்.

### 59. கர்ப்பமழிப்பதற்கு

பெருங்காயம் சாப்பிட்டால் கர்ப்பமழியும்; பிண்டம் செத்துப் போகும்.

### 60. மேற்படிக்கு

வேலிப்பருத்தியிலை சாப்பிட, கர்ப்பம் அழிந்துபோகும்.

### 61. மேற்படிக்கு

அருதா இலை 30
சூடம் 10
பனைக்கருப்புக்கட்டி
சீனிச்சர்க்கரை - வகைக்குப் பலம் 10
சூரணித்துக் கொடுக்கக் கர்ப்பம் அழிந்துவிடும்!

### 62. மேற்படிக்கு

கரியபோளம்
கருமிளகு
வெங்காரம்
வகைக்குக் கிரெயின் 20, தேன்விட்டு அரைத்துப் 12 குளிகையாக்கிக் காலையிலும், சாய்ந்தரமும் சாப்பிட்டு வரக் கர்ப்ப மழியும்!

6 நாள் சாப்பிட வேண்டியது.

## 63. கோயம்புத்தூர்ச் சாமியார் நீர்க்கடுப்பு வகைக்கு

நல்ல சந்தனம்
வெடியுப்பு
மாசிக்காய்
நெல்லிவற்றல்

இவை நான்கும் சமனெடை; இவை நான்கிற்கும் சமனெடை சீனாக்கற்கண்டும் கூட்டி, நயமான பன்னீரில் நன்றாயரைத்துத் தேற்றா விதையளவாய்க் குளிகை செய்துலர்த்தி 1, 2 சாப்பிட்டு, வெள்ளாட்டுப் பாலாவது, பசுவின் பாலாவது மேலே சாப்பிட வேண்டியது.

## 64. முகவங்குக்கு

முகவங்குக்கு, மேற்படியார் பலகரையை எலுமிச்சம்பழச் சாற்றிலூறவைத்து, 3 நாள் இரவியிலுலர்த்தி, மேற்படி எலுமிச்சம் பழச்சாற்றில் வெண்ணைபோலரைத்து, மெதுவாய்ப் பூசிவரவும்.

## 65. ஓமப் பதங்கம்

ஓமம் வீசை 1
பசுவின்பால் படி 1
ஆட்டிகள் (?) படி 2

விட்டுக் கலக்கி, யதில் நாட்டுச்சூடம் தோலா 1, பச்சைக் கற்பூரம் தோலா 1 பொடித்துப் போட்டு, 3 நாள் புளிக்கவைத்து, வாயகலமுள்ள புதுத் தாழியிலூற்றி, மேலே தட்டைச் சட்டிமூடி, சந்து வந்தனம் செய்து, அடுப்பில் வைத்து, இளந்தியாயரிக்க, மேற் சட்டியில் பதங்கமேறியிருக்கும்!

அதையெடுத்து, நான்கு குன்றியெடை வயிற்றுவலி வகைக்குக் கொடுக்கலாம்.

## 66. இந்திரியச் சிராவக்கு

மகிழம்பட்டை
புரசம் பிசின்
சிமைநீர்முள்ளி விதை
இவற்றின் சூரணம் வகைக்குப் பலம் 1, சேர்த்தரைத்துத் தண்ணீர் தேன், நெய்-அனுபானம்.

7 நாள் இச்சாபத்தியம்

## 67. வீரியக்கட்டுக்கு

கருவேலம் பூ
மேற்படி பட்டை
மேற்படி கொழுந்து
மேற்படி இலை
சமனெடை சூரணித்து, அதற்குச் சரியெடை சர்க்கரை கூட்டித் திரிகடி யளவு 2 நேரம், 5 நாள் இச்சாபத்தியமாகச் சாப்பிடவும்.

## 68. சிரங்குக்கு

சிறுசிரங்கு, பெருஞ்சிரங்குக்குத் தேங்காயெண்ணையில், நெல்லிக்காய், கந்தகம் வராகனெடை ½ போட்டு உருக்கியதில் ஒரு சிரங்கை ஈர வெங்காயம் அரிந்துபோட்டு, வணக்கி, வெந்த பின், மேற்படி வெங்காயத்தைச், சாப்பிட்டு, மேற்படி யெண் ணையைச் சிரங்குக்குப் பூசி வரவும்.

## 69. மயில்துத்த பஸ்பம்

கொருகுப்பாலை யென்னும் கிராந்தி நாயகச் செடியை ..த்துச் சாறுபிழிந்து, துணியிலூட்டித் துத்தத்திற்குச் சிறுபந்து ..ல் சுற்றி, எருவில் புடமிடப் பஸ்மம்!

மேற்படி இலை வகையில் வரும் பாலைச் சுனத்தில் வரும் கொருக்குப் புண்களுக்குத் தடவிவரப் புண் ஆறும்!

(சுனத்தில் - ஆண் குறியில்)

### 70. பலம் உண்டாக

வறுத்த கடலை மா பலம் 1

பேரீச்சம்பழம் பலம் 1

தேன், சீனி சேர்த்துப் பிசைந்து, காலை மாலை 20 நாள் சாப்பிட. முருங்கைப்பூவும், பேரீச்சம்பழமும் போட்டுக், காய்ச்சிய பாலில் சீனி கலந்து சாப்பிட; இதில் சாதிக்காய் அரை போட்டுக் காய்ச்சி சாப்பிடத் தாது கட்டும்! போதையாயிருக்கும்!

### 71. சுதேசமித்திரன்

1. சீரணக் குறைவு
2. பசியில்லாதிருத்தல்
3. புளியேசுப்பம்
4. வாயில் நீர்ச் சுரப்பு
5. வாந்தி
6. இரத்த வாந்தி
7. வயிற்று நோய்
8. வயிறுப்பல்
9. மந்தபேதி
10. கிராணி
11. கழிச்சல்
12. மூக்கில் நாற்றம்
13. பித்த மயக்கம்
14. கிறுகிறுப்பு
15. இருமல்

வகைக்கும் பசியுண்டாதற்கும்.

| | |
|---|---|
| பால் | $1\frac{1}{2}$ அ |
| கஞ்சா | $\frac{1}{2}$ அ |
| மிளகு | 2 பை |
| சாதிக்காய் | 3 பை |
| சாதிப்பத்திரி | 3 பை |
| லவங்கப்பட்டை | 1 பை |
| சுக்கு | 1 பை |
| வாழைப்பழம் | $\frac{1}{2}$ அ |
| மதனகாமப்பூ | 3 பை |
| அபின் | 1 அ |

இவைகளைச் சலம் விட்டரைத்துப் பாலில் போட்டு வாழைப் பழத்தையும் போட்டுச் சீனி முதலானவையும் பிறகு சேர்க்க; புளியிட்ட சரக்கை அரைத்துப் போடவும், கற்கண்டை நறுக்கிப் போடவும்.

(அ - அணா; பை - பைசா)

இது இராமானுஜம் என்னும் பெயர் வாய்ந்த யுவஜன மனோரஞ்சனி. இது ஏ. கே. விசுவநாதம் சொன்னது; ஒப்புக் கொள்ளப்பட்டது.

லாகிரி அதிகமாயின், வாழைப்பழச்சாறு அல்லது உப்புத் தண்ணீர் படி $\frac{1}{8}$ மாற்று.

### 75. தேள்கடி
### கே. எஸ் ரங்கசாமி ஐயங்கார்

கிராமபோன் பிளேட் உடைந்த துண்டைத் தீயில் காட்டி, ..ருகிய பாகத்தை உடனே கடித்தவிடத்தில் தடவவும்.

### 77. மேற்படிக்கு
### முதலி பாளையம் மு. குமாரசாமிக் கவுண்டர் அநுபவம்

..ான்கு வெற்றிலையில் கிராம்பு, கொட்டைப் பாக்கு, உப்பு ..ு உள்ளுக்குக் கொடுக்கவும்.

| | |
|---|---|
| பால் | $1\frac{1}{2}$ அ |
| கஞ்சா | $\frac{1}{2}$ அ |
| மிளகு | 2 பை |
| சாதிக்காய் | 3 பை |
| சாதிப்பத்திரி | 3 பை |
| லங்கப்பட்டை | 1 பை |
| சுக்கு | 1 பை |
| வாழைப்பழம் | $\frac{1}{2}$ அ |
| மதனகாமப்பூ | 3 பை |
| அபின் | 1 அ |

இவைகளைச் சலம் விட்டரைத்துப் பாலில் போட்டு வாழைப் பழத்தையும் போட்டுச் சீனி முதலானவையும் பிறகு சேர்க்க; புளியிட்ட சரக்கை அரைத்துப் போடவும், கற்கண்டை நறுக்கிப் போடவும்.

(அ - அணா; பை - பைசா)

இது இராமானுஜம் என்னும் பெயர் வாய்ந்த யுவஜன மனோரஞ்சனி. இது ஏ. கே. விசுவநாதம் சொன்னது; ஒப்புக் கொள்ளப்பட்டது.

லாகிரி அதிகமாயின், வாழைப்பழச்சாறு அல்லது உப்புத் தண்ணீர் படி $\frac{1}{8}$ மாற்று.

### 75. தேள்கடி
### கே. எஸ் ரங்கசாமி ஐயங்கார்

கிராமபோன் பிளேட் உடைந்த துண்டைத் தீயில் காட்டி, உருகிய பாகத்தை உடனே கடித்தவிடத்தில் தடவவும்.

### 77. மேற்படிக்கு
### முதலி பாளையம் மு. குமாரசாமிக் கவுண்டர் அனுபவம்

நான்கு வெற்றிலையில் கிராம்பு, கொட்டைப் பாக்கு, உப்பு வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

## 78. பாம்புக்கடி பாம்பு பிடிப்பவர்கள் சொன்னது

கோப்புக் கட்டும் மூனைச்செடி சமூலத்தைத் தண்ணீர் விட்டரைத்துச் சாப்பிடவும்.

## 79. மேற்படிக்கு

மூனைச்செடி, ஆடுதின்னாப்பாலை, இரண்டையும் வெள்ளாட்டுப் பாலில் அரைத்துச் சாப்பிடவும்.

மிளகை நுணுக்கி, அனலில் போட்டு, வரும் புகையை முகரவும்.

## 80. அண்டவாய்வுக் குறிரோகம் (நரைவாதம்)

கோழிமுட்டை 2, ஆனை தெள்ளுப் பருப்பு, முடக்கத்தான் தழை-இம் மூன்றையும் வணக்கிச் சாப்பிடவும்.

## 81. எருது குலைமுட்டி நோய்

கருப்பட்டி
உப்பு
பிரண்டை
உரிக்காவேர்
மோர்

இவைகளை ஆட்டிக் கொடுக்கவும்.

## 82. மேற்படிக்கு

பழமிளகாய், மோர், நொச்சியிலைச் சாறு இவைகளை ஆட்டிக் கொடுக்கவும்.

## 83. எலும்பொடிந்த மாட்டுக்கு

முதலில் வெந்தண்ணீரைச் சுடச்சுட வீக்கமான இடத்தில் அடிக்கவும்

ஆவாரந் தளையை இடித்து, உப்புச்சேர்த்து, நல்லெண்ணையில் வணக்கி வைத்துக் கொண்டே மேற்படி இடத்தில், காலை, மாலை ஒத்தடங் கொடுத்து வரவும்.

வீக்கம் வற்றும்.

சாரைப்பாம்பு எண்ணை $\frac{1}{4}$ படி, தவளை எண்ணை $\frac{1}{4}$ படி, பன்றி எண்ணை $\frac{1}{2}$ படி - இவைகளைச் சேர்த்து, மேற்படி வீக்கத்தின் மேல் 7 நாளைக்குத் தேய்த்துக் கொண்டு வர, எலும்பு கூடிவருமாம்!

வீக்கம் வற்றியவுடன் எலும்பு கூடாமலிருந்தால், ஓடிந்த எலும்புகளைச் சரியாகப் பொருத்திச் சிறுமூங்கில் தப்பைகளைக் கால்வாட்டத்தில் சுற்றுவைத்துக் கட்டி, 3 நாட்களுக்குப் பின் அவிழ்க்கவும்.

முறிந்த எலும்பு, புரையோடியிருந்தால், புண்ணை வெந்நீரால் சீயைப் பிதுக்கிவிட்டுச் சுத்தஞ் செய்யவும். நல்லெண்ணையில் எலுமிச்சங் காயை இரண்டாக அறுத்துப் போட்டு, எண்ணை நன்றாய்ச் சூடேறும் வரையில் காய்ச்சி, மேற்படி எலுமிச்சம் துண்டைப் புண் துவாரத்தில் பிழிந்து, புண்ணின்மேல் மேற்படி பிழிந்த பழத்தை வைத்துக்கட்டவும்.

இப்படி தினந்தோறும் புண்ணைச் சுத்தி செய்து, மேற்கூறிய வாறு புண் மேவும் வரையிலும் செய்து வரவும்.

கைகண்டது.

## 84. விஷக்கடி

வேப்பம் பருப்பின் மேல் கசகசாவைத் தடவவும்.

இவ்விதமாக ஐந்து பருப்புகளைக் கொடுக்க, வாந்தியாகி விஷம் வெளிப்பட்டுப் போம்!

### 85. சுகப்பிரசவத்திற்கு

பிரசவ காலத்தில் வருத்தமேற்பட்டால், விளக்கெண்ணையில் ஒரு நெல்லடை யளவு கசகசாவை அரைத்துத் தடவவும்.

### 86. குழந்தைகள் அலறுதல்

குழந்தைகள் இரவில் தூங்கும் போது அலறுதல், உச்சியில் பள்ளம் விழுதலுக்கும் கண்ணில் கசகசாவைத் தடவலாம்.



ஸ்ரீரஸ்து

# வைத்தியச் சாத்திரம்

பெ. பழனிசாமிக் கவண்டர்

பழனி புளியம்பட்டி

21-11-1928

### 1. விக்கத்திற்கு

சந்தனம்
சண்பகமொட்டு
சிறுமாதுளை
சீரகம்
கருஞ்சீரகம்
அதிவிடயம்
கிராம்பு
நாகப்பூ
கடுகுரோகிணி
சுக்கு
மிளகு
திப்பிலி
பெருங்காயம்
வசம்பு
அசமதாகம்
காக்கைகட்டி

இவற்றைச் சூரணித்துச், சோமத்தில் போட்டு வெண்காரம் பொரித்துப் போட்டுக், குடிநீர் கொடுக்கச் சருவாங்க விக்கமும் தீரும்!

(சருவாங்க = சருவ + அங்க; எல்லா உறுப்புகளும்)

### 2. மூக்கில் இரத்தம் விழுவதற்கு

நருவிளா இலையைத் துவைத்துத் தயிர்விட்டுப் பிசைந்து தலைக்குத் தேய்க்கவும்.

அதிமதுரம், செங்கழுநீர்க் கோஷ்டம் — இவ்விரண்டும் தட்டி, முலைப்பால் சேர்த்து நசியமிடவும்.

### 3. வாயில் இரத்தம் விழுவதற்கு

கடுகு
மெழுகு
வெள்வெங்காயம்
திப்பிலி
சுக்கு
வகைக்குப் பலம் 1,
கருஞ்சீரகம்
ரக்கு (?) காசெடை
சமுத்திரப்பழம் - பலம் 1
இவற்றைக் குடிநீர் வைத்துக் கொடுக்கவும்.

### 4. வீக்கத்திற்கு

சாரணைவேர்
வேப்பலகு
பேய்ப்புடல்
நிலவேம்பு
சீந்தித்தண்டு
சுக்கு
வசம்பு
மரமஞ்சள்
இவற்றைக் கசாயமிட்டுக் கொள்ளவும்.

சாரணைவேர், உப்பு அரைத்துப் பூசவும்.

எலிப்பிளுக்கை யரைத்துப் பூரம், செங்கத்தாரிப்பட்டை, வேப் பலகு, நீர்முள்ளி, வக்கணம்பட்டை, சங்கம் வேர், பிரம்பிவேர், நாயுருவியிலை, ஊராக்கொழுந்து, கறிவேப்பிலை, நொச்சியிலை, ஆடாதோடையிலை, பெருங்குருந்திலை, மாவிலிங்கக்காய்,

இவற்றைக் கசாயமிட் டதில், கொத்துமல்லி, வெள்ளுள்ளி, அதி மதுரம், செங்கழுநீர்க் கோஷ்டம், இவற்றைப் பசுவின்பால் வார்த் தரைத்துக், கையாந்தகரைச் சாறு படி 1 கூட்டிக் கொதிக்க வைத்துப், பின்பு, கருப்புக்கட்டி போட்டு, நெய்விட்டு இறக்கிக் கோழிமுட்டை, வெள்ளைக் கருவிட்டு இறக்கிக் கொள்ளவும்.

### 5. ஆறாத புண்களுக்கு

விதை நீக்கிய கொம்புப்பாகற்காய்க்குள் கெளரிப்பாஷா ணத்தை வைத்து, விளக்கெண்ணையிற் கருக வேகவைத்து எடுத் தரைத்துச் சீலையிற் றடவிக் காயவைத்துப் புண்ணிற்போட்டு, மறுநாள் காலையில் எடுத்துவிட்டு வேப்பங் கொழுந்தும் மஞ்சளும் கூட்டி, முலைப்பால் விட்டரைத்துப் போடவும்.

கை கண்டது.

### 6. ஆண் கட்டுக்கு

வட்டத்திவேர், முள்ளிக்காயளவு அரைத்துப் பசுவின் பாலிற் கொள்ளவும்

### 7. கிராணிக்கு

புளியாரைச்சாறு
நெய் -
வகைக்குப் படி 1
அத்திப்பட்டை
மாம்பட்டை
நாவல்பட்டைச்சாறு -
வகைக்குப் படி 1

திரிகடுகு
திரிபாலை
சதகுப்பை
அரத்தை
கொத்துமல்லி
குடப்பாலை
சாதிக்காய்
கிராம்பு
வசவாசி(?)
பெருமரப்பட்டை
அதிவிடயம்
இலவம்பிசின்
முத்தக்காசு
அசமதாகம்
சேவியம்
செவ்வள்ளி
வட்டத்திருப்பி
வெள்ளிலோத்திரம்
மஞ்சள்
வரட்சுண்டிவேர்
சவுக்காரம்
கொடுவேலிவேர்
இருவேலிவேர்
சந்தனம்
மனோசிலை
இலவங்கப்பட்டை
தேவதாரம்
சுக்கு
கொத்துமல்லி
வகைக்கு வராகனெடை 2

அரைத்துப் போட்டுக் காய்ச்சி, யிறக்கி, நெல்லிக் காயளவு கொள்ளவும்.

### மேற்படிக்குப் பாட்டு

சீதமும் வழும்பே தோன்றிச்
 சிவந்தெழு கடுப்பு முண்டாய்
வேதனை செய்யு மாகில்
 விளம்புவேன் ஒன்று கேளாய்!
சாதிவெள் ளாட்டின் பாலில்
 சங்குவெண் ணறச்சை செய்து
கோதியான் பழத்தின் சாறும்
 கூட்டியே கொடுக்கப் போமே!

(வழும்பு — வழுவழுப்பான நீர்ப்பொருள்)

### 8. மூலக்கிராணிக்கு

பெருமரத்துப்பட்டை
குடசப்பாலை வேர்

இவ்விரண்டும் கசாயமிட் டதில்,

வெள்ளுள்ளி
சுக்கு
மிளகு
சீரகம்
ஓமம்
கிராம்பு

இவற்றை வறுத்துப் போட்டுக், காய்ச்சிச் சீனியும் எருமைத் தயிருங் குழப்பிக் கொடுக்கவும்; மூலக் கிராணி தீரும்!

## 9. கிரராணிக்குச் சூரணம்

சாதிக்காய்
சாதிலிங்கம்
தானிக்காய்
இந்துப்பு
அதிவிடயம்
சுக்கு
விளாம்பிசின்
திப்பிலி
புளியம்விதைத்தோல்
முள்ளி விதை
சீரகம்
காட்டாத்திப் பூ
காசுக்கட்டி
மாங்கொட்டைப் பருப்பு
கஞ்சா

இவைகளைச் சூரணித்து, வெருகடியளவு நெய், தேன், சர்க்கரையில் கொள்ள,

1. விக்கல்
2. கிராணி
3. ஆதிசாரம்
4. சேத்துமம் தீரும்!

## 10. ஏலாதி கிருதம்

அமுக்குரா வேர்
சித்தாமுட்டி வேர்
தண்ணீர்விட்டான் கிழங்கு
சித்தாமல்லி

பாலைவேர்
நொச்சிவேர்

இவை சமன் பலம் 60, 8 வள்ளத் தண்ணீர் விட்டு. 2 படியாகக் காய்ச்சிப்,

பசுவின் நெய்படி 2
சந்தனம்
நெய்தல் கிழங்கு
அதிமதுரம்
திப்பிலி
கொட்டிக் கிழங்கு
முந்திரிப் பழம்
தேவதாரம்
கற்றாழை வேர்
நீர்வள்ளிக் கிழங்கு
வெள்ளரிக்காய்
வெள்ளைக் காக்கணம்
தாமரை வளையம்

இவை வகைக்குச் சார்படி 2

பொன்னாங்கண்ணிவேர்
சிறுகீரை வேர்
தாமரை வளையம்
செங்கழுநீர்க் கிழங்கு
ஓரிலைத் தாமரை வேர்
நன்னாரி வேர்
அமுதவள்ளிக் கிழங்கு
நற்பாலை வேர்

வகைக்கு வராகன் எடை $\frac{1}{4}$,

ஏலம்
லவங்கம்
அதிமதுரம்

சாஸ்திர பேதி
கிராம்பு
சிறுநாகப்பூ
சாதிக்காய்
சண்பகப்பூ
பேரீச்சம் பழம்
கற்கண்டு
சர்க்கரை
சடாமஞ்சி
மஞ்சள்
மஞ்சிட்டி
கோட்டம்
கோரோசனை
சேவியம்
செவ்வள்ளிக் கொடி
சந்தனம்
கலங்கொம்பு
அகில்
புனுகுச் சட்டம்
கூகை நீர்

வகைக்கு வராகனெடை 3 அரைத்துப் போட்டுக், கலந்து, காய்ச்சி வடித்து, முக்கழஞ்சு நெய், சர்க்கரை கூட்டிக் கொள்ளவும்.

பித்தம், வறட்சி, மேகம், உள்ளரிப்பு, அந்திச்சுரம் தீரும்!

## 11. நிம்பாதித் தைலம்

ஆடாதோடை
துளசி
பிரமி

வேலிப்பருத்தி
நொச்சி
தரா

இவற்றின் இலைச்சாறு வகைக்குப் படி 1; வேப்பம்பட்டை யிடித்து 8 படி நீர்விட்டு 2 படியாக்கி, நல்லெண்ணை படி 2 சேர்த்து

ஏலம்
செங்கழுநீர்க் கோஷ்டம்
இந்துப்பு
கடுக்காய்
கொடுவேலி வேர்
மஞ்சள்
மரமஞ்சள்
வசம்பு
கடுகுரோகினி
பெருங்காயம்
வாய்விளங்கம்
துத்தம்
சுக்கு
மிளகு
திப்பிலி
கருஞ்சீரகம்
வெளிசிப்பிசின்
கற்கடகசிங்கி
சிறுதேக்கு
அரத்தை
சேவியம்
ஆனைத்திப்பிலி
திப்பிலி மூலம்
சிவதை வேர்
வெள்ளுள்ளி

சிவனார்வேம்பு வேர்
கிலுகிலுப்பை வேர்
நரிமிரட்டி வேர்
இவை வகைக்கு வராகனெடை;
2 நாக்குப்பூச்சி சுட்டது
முசுறு, முட்டை
இவைகளை யரைத்துப் போட்டுக் காய்ச்சி, வடித்துச் சாப்பிட்டு மேலும் பூச, நாக்கு, கண், தலை இவற்றின் வலி, தடிப்பு, தொண்டைக்கட்டு, வாதச் சன்னி, வாய்வு தீரும்!

## 12. சன்னி வாதத் தைலம்

கோழிமுட்டை 4 அவித்து, வெள்ளைக் கரு நீக்கி, சொற்றான் சாறு வார்த்தரைத்துச் சட்டியிலிட்டுத் துழாவி வறுத்துக், கடுகு திரள் பதத்தில் தைலம் வடித்துக் காசெடை உள்ளுக்குக் கொடுத்து மேலும் பூசவும். வாதம் தீரும்!

## 13. மேற்படிக்கு

எருக்கம் பால்
கள்ளிப்பால்
சீலையிலூட்டி மூன்று தரம் உலர்த்தி,
முட்டிக் கந்தகம்
வேப்பெண்ணை
இவை யரைத்து, மேற்படி சீலையில் தடவித், திரியாகத் திரட்டி, நீரில் தோய்த்து, சுடர்த்தைலம் வாங்கிச் சாப்பிட்டு, மேலுக்குப் பூச, வாத ரோகங்கள் தீரும்!

## 14. இருமலுக்குக் குண்டலாதி லேகியம்

கண்டங்கத்திரி சமூலம்
தூதுவளை சமூலம்-

வகைக்குப் பலம் 30
சிறுகாஞ்சலி பலம் 20
சங்கம் வேர் பலம் 40
காரிண்டுக்கோல் பலம் 15
செங்கத்தாரிப்பட்டை பலம் 2
பேராமுட்டி பலம் 10

இவைகளைக் குறுகத்தறித்து, 2 மிடாமல் போட்டு, 14 வள்ளம் தண்ணீர் விட்டு, 2 வள்ளமாகக் காய்ச்சி, ஒரு தாழியில் வடித்து, 3 படியாகக் காய்ச்சி,

ஏலம் வராகனெடை 1
லவங்கம் வராகனெடை 3
சுக்கு பலம் 1
திப்பிலி பலம் 1
மிளகு பலம் ½
நற்சீரகம் பலம் ½
கருஞ்சீரகம் பலம் ½
திப்பிலி மூலம் பலம் ¼
கற்கடகச் சிங்கி பலம் ½
கண்டுபரங்கி பலம் ½
வாய்விளங்கம் பலம் ½
கோஷ்டம் பலம் ¼
அரத்தை பலம் 1
சித்தரத்தை பலம் ½
கடுகு பலம் ½
அரையஞுகம் பலம் ½
கொத்தமல்லி பலம் ½
சாதிக்காய் பலம் 1
சாதிப்பத்திரி வராகனெடை 1
கோரோசனை வராகனெடை 1
ஓமம் வராகனெடை 1

தாளிசப்பத்திரி
மஞ்சிட்டி
சிறுநாகப் பூ
பெருநாகப் பூ
கூகை நீர்
சடாமஞ்சி
வகைக்கு வராகனெடை 2

இவற்றைச் சூரணித்துத் தூவிக் கிளறி, இறக்கி, கொளிஞ்சிக் காயளவு சாப்பிட,

1. சயம்
2. காசம்
3. ரத்தகாசம்
4. உப்புசம்
5. இருமல்
6. பொருமல்
7. வாய்வு
8. சேத்துமம்
9. மந்தாக்கினி
10. பித்தம்
11. மேகசன்னி, தீரும்!

பத்தியம்-துவரம் பருப்பு, அரைக்கீரை, வேளைக் கீரை, சிறு கீரை, பொரிமிளகுச்சாறு கூட்டவும்.

கடுகு, பெருங்காயம் நீக்கவும்.

நல்லெண்ணை, கத்தரிக்காய், கடுகு, பெருங்காயம் ஆகாது!

## 15. கண்டங்கத்திரி லேகியம்

கண்டங்கத்திரிச்சாறு படி 3
உத்தமதாளிச் சாறு படி 1

கற்கடகச் சிங்கி
சிறுதேக்கு
சுக்கு
மிளகு
திப்பிலி
கடுக்காய்
தானிக்காய்
கோஷ்டம்
இந்துப்பு
அத்தி
திப்பிலி
சிறுமூலம்
சங்கம்பாளை வேர்
பெருங்குரும்பை
செவியம்
சிவதை-
வகைக்குக் கழஞ்சு 1

இவற்றை அரைத்து, இளநீர், நெய்யில் சேர்த்துக் கூட்டிக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

ஈளை, இருமல், சயம், நெஞ்சு நோய் தீரும்!

## 16. இருமலுக்கு லேகியம்

வேப்பம் பட்டை
புற்றின்மேல் ஊஞ்சப்பட்டை
கண்டங்கத்திரி
மொசுமொசுக்கை
கையாந்தகரை
தூதுவளை

இவை சரியெடை கூட்டி 8 வள்ளத் தண்ணீர்விட்டு, 1 வள்ளமாகக் காய்ச்சி வடித்துப் பசுவின் பால் படி 2 சேர்த்துத்

திப்பிலி
திப்பிலி மூலம்
தேசாவரம்
வாய்விளங்கம்
கொத்துமல்லி
கருஞ்சீரகம்
நற்சீரகம்
ஓமம்
சுக்கு
சேவியம்
முக்கொவிஞ்சி
அரத்தை
காட்டுக் கொள்
காட்டு அவரை
சீரகம்
நிலவேம்பு
பொன்முசுட்டை
பகரிவேர்
சிறுகுறிஞ்சான் வேர்
தானிக்காய்
நெல்லிப்பருப்பு

இவைகளை இழத்துச் சேர்த்து, பசுவின் நெய் படி 1, சர்க்கரை பலம் 8, தேன் படி $\frac{1}{2}$ இதுவெல்லாங் கூட்டி, நீர் சுண்ட எரித்துக் கொள்ள எல்லா இருமலும் தீரும்!

## 17. சயத்திற்கு முயல் நெய்

2 முயல் உரித்தி குடலும் தலையும் போக்கி, 50 பலம் இடித்துத் தூணி நீரிலிட்டு, 4-இல் ஒன்றாய்க் காய்ச்சி வடித்துக் குறுணி நீரில் நெய் படி 3, ஆடாதோடை, கண்டங்கத்தரி,

சிறுவழுதலை, தூதுவளை இவை இடித்துத் தூணி நீர் விட்டு, எட்டிலொன்றாய்க் காய்ச்சி வடித்துச் சேர்த்துப் பசுவின்பால் படி 2சேர்த்துத்

திப்பிலி
திப்பிலி மூலம்
ஆனைத் திப்பிலி
கடுகுரோகிணி
கற்கடகச் சிங்கி
சிறுதேக்கு
கோட்டம்
மரமஞ்சள்
சடாமஞ்சி
குந்திரிக்கம்
எவச்சாரம்(?)
சீரகம்
விளாவரிசி
வெட்பாலையரிசி
தேவதாரம்
நீர்க்காக் கோழி
செவியம்
செவ்வள்ளி
அதிமதுரம்
இந்துப்பு
காகிலவணம்
சீனிக்காரம்
இடவகம்
முந்திரிப் பழம்
திரிபாலை
குளவிந்த மஞ்சள்
வகைக்குக் கழஞ்சு 3

அரைத்துப் போட்டுக் காய்ச்சி, வடித்துத் திப்பிலியுந் தேனுங் கலந்து, மேற்படி நெய் கூட்டிச் சாப்பிடச் சர்வ சயரோகமுந் தீரும்!

பத்தியம்-தூதுவளைப்பூ 120 காசெடை, முயலுப்புக்கண்டம், பால். நெய் கூட்டவும்.

## 18. சயரோகத்திற்குக் குண்டலி நெய்

சங்கம் வேர் பலம் 200, தூதுவளை இடித்தது பலம் 50 இடித்துத் தூணி நீர் விட்டுக், குறுணியாகக் காய்ச்சி, வடித்ததில்,

திப்பிலி
திப்பிலி மூலம்
அத்தித்திப்பிலி
கடுகுரோகிணி
கற்கடகச் சிங்கி
இந்துப்பு
கருஞ்சீரகம்
பெருங்காயம்
வெங்காரம்
சீனிக்காரம்
ஏலக்காய்
துவச்சிக் கடுகு
மிளகு
விளாவரிசி
வெட்பாலையரிசி
வாலுளுவை அரிசி
சிறுதேக்கு
கண்ட மஞ்சிட்டி
கூகை நீர்
ஓரிலைத் தாமரை

சிறுகாஞ்சோறிவேர்
ஆடாதோடைவேர்
அக்கிராக்காரம்
சிறுதேக்கு
சாரணைவேர்
பால்சுண்டி
அதிவிடயம்
வட்டத்திருப்பிவேர்
வெட்டிவேர்
விலாமிச்சம்வேர்
சுக்கு
வகைக்கு வராகனெடை 3

பசுவின் பாலிலரைத்து, நெய்யோடு கலந்து, காய்ச்சி வடித்துக் கொள்ள,

1. வற்றின சரீரம்
2. ஒத்தப்பித்தம்
3. பெரும்பாடு
4. எலும்புருக்கி
5. விஷப்பாகம்
6. காமாலை
7. பிரமியம்
8. உள்வெக்கை
9. தாகம்
10. சுவாசம், தீரும்.

## 19. சலியரனாகிருதம்

சிறுவழுதலை வேர்
கோட்டம்
மஞ்சிட்டி

நாகப்பூ
மாதுளம்பழம்
தாளிசப்பத்திரி
சிறுசண்பகம்
நெய்தற்கிழங்கு
நில ஆமணக்கு
தாமரை வளையம்
சந்தனம்

வகைக்கு வராகனெடை 10 பசுவின் பாலிலரைத்து, நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்துத் தேன் சர்க்கரை கூட்டிக்கொள்ள,

1. வாதம்
2. பித்தகாசம்
3. பாக்குரோகம், தீரும்!

## 20. நமனரர் சித்தித் தைலம்

நல்லெண்ணை படி 3
கடுக்காய் படி $\frac{3}{4}$
தானிக்காய் பலம் $\frac{1}{4}$
நெல்லிப்பருப்பு பலம் 1
கடுகு ரோகிணி பலம் $\frac{1}{4}$
கற்கடகச்சிங்கி பலம் $\frac{1}{4}$
தும்பருட்டம் பலம் 1
கொத்துமல்லி
செவியம்
பெருங்காயம்
மஞ்சிட்டி
சுக்கு
கண்டுபரங்கி
சமுத்திராப்பழம்

வேப்பம்பட்டை
வில்வவேர்
செம்பொழிச்சகான் வேர்
கழஞ்சி வேர்
சாரணை வேர்
கையாந்தகரை
நீர்முள்ளிச் சமூலம்
புங்கம் வேர்
எருக்கம் வேர்
வேளை வேர்
நொச்சி வேர்
தூதுவளைச் சமூலம்
சிற்றாமுட்டி வேர்
காட்டு முருங்கை வேர்
நாரத்தை வேர்
ஆமணக்கம் வேர்
கொளிஞ்சி வேர்
ஆடாதொடை வேர்
சிறுகுறிஞ்சாவேர்
வகைக்குப் பலம் $\frac{1}{2}$
கோரைக்கிழங்கு
நன்னாரி வேர்
பொன் முசுட்டை
வேர் வகைக்குப் பலம் 1

இவற்றை நறுக்கி யிடித்து, 4 வள்ளத் தண்ணீர் விட்டு, எட்டொன்றாய்க் காய்ச்சி, யதில் முன்சொன்ன நல்லெண்ணையும், கடைச்சரக்கிடித்த சூரணமும் சேர்த்துப் பசுவின் பால், வெள்ளாட்டுப்பால் வார்த்து, மெதுவாயெரித்து வடித்துக் கொள்ளவும்.

மேலும் பூசி நசியம் பண்ணி, அப்பயங்கம் பண்ணிப் பொரிமாவில் உள்ளுக்குங் கொள்ள,

1. பீனிசம்
2. பாரிகுந்தம்
3. சிரோவாய்வு
4. தனுர்வாதம்
5. அண்டவாதம்
6. அர்த்தவாதம்
7. குன்மம்
8. சூசிக வாய்வு, தீரும்!

பத்தியம், முருங்கைக்காய், துவரைப்பருப்பு, வாழைக்காய் அரைக்கீரை கூட்டவும்.

## 21. இந்திராணித் தைலம்

நொச்சியிலை
கச்சத்திராய்ச் சமூலம்
பேய்ப்புடல்
ஆடாதோடை
சாரணை வேர்
வேலிப் பருத்தி
வகைக்குச்சாறு படி 2 சேர்த்து,
சுக்கு
மிளகு
திப்பிலி
நெல்லிக்காய்
தான்றிக்காய்
கோரோசனை
மரமஞ்சள்
வெங்காரம்
அரத்தை
கருஞ்சீரகம்

சமன் (அளவு)
வெளிச்சப்பிசின்
இந்துப்பு
கார்போக அரிசி
வெள்ளுள்ளி
முயிறுமுட்டை
நாங்கூழ்
வகைக்கு வராகனெடை 3

அரைத்துக் கரைத்துக் காய்ச்சி வடித்துப் பூசச் சன்னிதோஷம் எல்லாம் தீரும்!

## 22. லக்குமாதித் தைலம்

கற்றாழை வேர், தண்ணீர் படி 2, நெல்லிப்பருப்பு பலம் 10, இருநாழியாகக் காய்ச்சிப், பசுவின் பால், நல்லெண்ணை வகைக்குப் படி 2 சேர்த்துக்,

கடுக்காய்
தான்றிக்காய்
நெல்லிக்காய்
அதிமதுரம்
கோட்டம்
அகில்
சந்தனம்
நாகப்பூ
சுச்சோலம்
ஆட்டாக் சுச்சோலம்
தேவதாரம்
மஞ்சள்
மரமஞ்சள்
வெட்டிவேர்

இலாமிச்சம்வேர்
செங்கழுநீர்க் கிழங்கு
முத்தக்காசு
நன்னாரிவேர்
லவங்கப்பட்டை
தாமரை வளையம்
ஏலம்
சடாமஞ்சி
சாதிக்காய்
நீலாஞ்சனக் கல்
செஞ்சந்தனம்
செவியம்
செண்பகப்பூ
சதகுப்பை
வகைக்கு வராகனெடை 2

அரைத்துக், கரைத்துக், காய்ச்சி, வடித்து முழுக, கழுத்துக்கு மேல் பட்டிவியாதி யெல்லாம் தீரும்!

## 23 வாதத்திற்கு எண்ணை

சிற்றாமுட்டி வேர், முதியார் கூந்தல் வேர், - வகைக்குப் பலம் 2

முன்னை வேர்
கூவளை வேர்
நெருஞ்சி வேர்
பெருங்குமிழை வேர்
சிறுவழுதலை வேர்
குழலாதண்டை வேர்
பேராமல்லி வேர்
கண்டங்கத்தரி வேர்
துலரம்பட்டை

வகைக்குப் பலம் 1
கொள்ளு படி 1

இடித்துத் தூணிப்பதக்கு நீரில் விட்டு, குறுணியாகக் காய்ச்சி, வடித்ததில்,

தேவதாரம்
சதகுப்பை
அரத்தை
சடாமஞ்சில்
பெருங்காயம்
இந்துப்பு
திப்பிலி
மஞ்சள்
திரிபாலை
திரிகடுகு
மஞ்சிட்டி
சந்தனம்
சீனிக்காரம்
கருஞ்சீரகம்
தேசாவரம்
கோட்டம்
தகரை விதை
அகில்
வசம்பு
அதிமதுரம்
செவ்வள்ளிக் கொடி
ஏலம்
நறும்பிசின்
லவங்கம்
சுச்சோலம்
கூகைநீர்

செம்பசலை
அரையளுகம்
விளாவரிசி
கடுகுரோகிணி
வெட்பாலையரிசி
ஓமம்
வசவாசி
யவச்சாரம்
உள்ளி
வட்டத்திருப்பி வேர்
இருவேலிவேர்
இலாமிச்சம் வேர்
சாத்திரப்பேதிக் கிழங்கு
அமுக்கலாங்கிழங்கு
நிலவாகை வேர்
சாரணை வேர்
வகைக்குக் கழஞ்சு 1
தழைவிழுதுச்சாறு படி 1
நல்லெண்ணெய்
வேப்பெண்ணை
விளக்கெண்ணை
இலுப்பையெண்ணை
பசுவினெய்
பசுவின் பால்
வகைக்குப் படி 1

சேர்த்துக், காய்ச்சி, வடித்து நக்கவும்.
உடம்புக்கிட்டுப் பிடிக்கவும்.

சரீரத்திலுள்ள குத்து, கைகால்தினவு, வீக்கம், பலக்குறைவு மரம்போல் நிற்பது, சந்து, தோள்வலிகள், மூர்ச்சிப்பது, வாதச் சூலை, குன்மம் 5, நெஞ்சுலைப்பு, எலும்புருக்கி, சல், மூர்த்திக் கிரிச்சனம், இந்திர வாய்வு, யோனி ரோகம், யோனிச் சூலை முதலியன தீரும்!

## 24. துவரதசித் தைலம்

ஆடாதோடை
சாரணை வேர்
கையாந்தகரை
தூதுவளை
குப்பமேனி
தேள் கொடுக்கு
கண்டங்கத்தரி
பொன்னாவரை
பிரமுட்டி
சுங்கு
சிறுவழுதலை
நீர்ப்பூலா
வகைக்குச்சாறு படி 3
நல்லெண்ணை படி 3
பசுவின் பால் படி 3

·லந்து.

சுக்கு
மிளகு
திப்பிலி
திப்பிலிமூலம்
நெல்லிக்காய்
தானிக்காய்

கடுகு ரோகிணி
லவங்கம்
சிறுதேக்கு
அதிவிடயம்
கற்கடகச்சிங்கி
அதிமதுரம்
தேவதாரம்
அரத்தை
இந்துப்பு
சீனிக்காரம்
வகைக்கு வராகனெடை 3

அரைத்துக், கரைத்துக், காய்ச்சி வடித்துக்கொள்ளக்,

1. குதமாத்தை
2. உழலை
3. இருமல்
4. எலிக்கடி
5. மருந்தீடு
6. பித்தக்காசம்
7. மந்திரக் காசம், தீரும்!

## 25. சைத்தியத் தைலம்

பொன்னாங்காணிச் சாறு குறுணி-1
பசுவின் பால் படி 4
பூசணிக்காய் 1
சர்க்கரை
கஸ்தூரி மஞ்சள்
வெளிச்சப்பிசின்
வகைக்குக் கழஞ்சு 4

பொடித்துப் போட்டு, ஒருபடியாகக் காய்ச்சி, யதில் தூதுவணம் பழம் தூள் படி 1, தேன்படி ½ சேர்த்துக் கொள்ள, எல்லா இருமலும் தீரும்!

பாட்டு

1. இண்டிசை மிளகொடும் இலங்கு தூதுவளை
கண்டிசை சுக்குடன் கலந்து ஓதநீர்
உண்டிட மின்னொரு வருக்கு இருமல்கள்
கண்டபின் தெண்டமும் தருவ னல்லவே!

2. கிடைதலை அளவிலே கிண்கிணி என்னவே
இடுதலை அளவிலே இருமலா யிக்கொள்
விடிதலை அளவிலே மிளகு நாலுகொள்
பொடுதலை அளவிலே அஞ்சுகொள் புருஷராகவே!

3. நெல்லி திப்பிலி நெற்பொரி சர்க்கரை
உள்ள தேனில் உகந்து விழுங்கிட
வள்ளு வள்ளென்று இருமலும் ஈளையும்
உள்ள மட்டும் ஒடுங்குவ துண்மையே!

4. கையாந் தகரை நாயுருவி
கருந்தக்காளி சங்கு தூதுவளை
மெய்யா மெருக்கு மொட்டு
வேலிப் பருத்தி இலைநாலும்
நெய்யா வலிசித் தளைகூட்டி
நொறுக்க வரைத்து அடைசுட்டுக்
கையால் வாங்கின தனைமென்றால்
கணைக்க வேண்டாம் கண்டீரே!

5. சுக்கு திப்பிலி துய்ய அமுக்குரா
மிக்க தான்றி மிளகு மிரமியம்
திக்கன வாலுளுவை யோடு தேனில்
சிக்கெனக் குழலா விசையா கும்மே!

6. கோடக சாலை கொடிக்கால் வெற்றிலை
வீட சாரணை ஈண்ட செருப்படை
ஆடா தோடையோ டைந்திலைப் பிட்டினில்
கோடா கோடி வியாதியும் தீருமே!

26

கற்கடகச்சிங்கி
மிளகு
திப்பிலி
சுக்கு
கடுக்காய்
நெல்லிக்காய்
கண்டங்கத்திரி வேர்
சிறுதேக்கு
கோஷ்டம்
சடாமஞ்சில்
தூதுவளை
வகைக்குப் பலம் 1

சூரணித்துக் கழஞ்சு எடை சூரணம், இளவெந்நீரி[illegible] [illegible]ளவும்

இராத்திரிக்கு ஆசனத்திற்கு மேல்,

தே[illegible] உரி 1
இன்[illegible]ரல் வேர் பிடி 1
கோ[illegible] டம்
அத்தி
திப்[illegible]லி
சட[illegible]ஞ்சில்
சுக[illegible]
கற[illegible] கச் சிங்கி

சிரகம்
வாலுளுவை அரிசி
இருவேலி - வகைக்குக் கழஞ்சு 1
திப்பிலி பலம் 2
சந்தனம் கழஞ்சு 1

இவை யரைத்துக் கலக்கிக் காய்ச்சி, ஆழாக்கு நெய்விட்டுக் கிளறிப் பாக்களவு 2 நேரமுங் கொள்ளவும்.

இம்மருந்துமுறை போக்கும் நோய் சுவடியில் குறிப்பிடப்பட வில்லை)

## 27. இருமலுக்குப் புகை

பிரன்பால்
வேலிப்படுத்திப் பால்

சிலையிலூட்டி, உலர்த்தி, அரிதாரம் கழஞ்சு-1 பொடித்து வைத்துக் கொடி வேலி வேர் ஒன்று வைத்துத் திரித்துக் கொண்டு, எருமைத் தயிரும் பழஞ்சோறும் தின்று புகை குடிக்கத் தீரும்!

## 28. மழைக்காலத்தில் வருகிற இருமலுக்கு

1. முற்றின ஊஞ்சற் சிராயைச் சூரணித்துக் கருப்புக் கட்டியிலிட்டுக் குழம்பாகக் காய்ச்சிச் சுக்கு, மிளகு பொடி செய்து தூவிக், கொடுக்கத் தீரும்!

வாயாலும் வயிற்றாலும் போனால், மாற்று-மோருஞ்சோறு கொடுக்கவும்.

2. கையாந்தகர இலை பொடி செய்து, எள்ளு கலந்து தின்றாலும் துளசியிலைத் தூளைத் தேனில் தின்றாலும், நீர்முள்ளி விதையும், கழுதை விசையும் குளிசமாடித்தலையில் கட்ட நிற்கும்!

### 29. பலபிணிக்கு மருந்து

[பாட்டு]

குத்த மான முயல்கண் போக்கவும்
 கொடிய தாபம் சரந்தன்னைப் போக்கவும்
பித்த மான பலபிணி போக்கவும்
 பிரித்து வைத்த மருந்தின் பெருமைகேள்
கொத்த மல்லி கடுகு விலாமிச்சை
 கொடிய சுக்கு மிளகுடன் திப்பிலி
இத்த சந்தனம் ஏலமும் சீரகம்
 இசைய வேசமன் சீனியும் கூட்டியே
கோத்தி லாத ஆவினெய் கூடவே
 குழைத்து நாள்தோறும் கொள்ளிடு மற்கெல்லாம்
சத்தி விக்கல் தலைவலி பித்தமும்
 சகல மான எரிப்பும் தணியுமே!

(கோத்திலாத-கோதிலாத-வலித்தல்-விகாரம்; கோது-குற்றம்)

### 30. அமரவாசையில் வருகிற இருமலுக்கு

எருக்கம்பால் உள்ளங்கையில் தடவி, எருமை மோரில் கையைக் கழுவி, அந்த மோரைக் குடிக்கவும்.

அறா வெய்யிலில் இருக்கவும்.

மயக்கமானால் மோருஞ்சோறு கொடுக்க, இருமல் நிற்கும்!

(அறாவெய்யில்-தொடர்ந்து அடிக்கும் வெய்யில்)

### 31. விக்கல் சத்திக்கு மருந்து

1. சத்தி நிற்கத் தண்ணிய விலாவிலே
 சுத்த மல்லிகை கட்டிடத் தீருமே!

2. நீல வெள்ளெரி நீர்கழு நீரொடு
கோல மான குறும்பைத்தரும் கஞ்சியில்
மேலூட் டியிலிட் டுக்கு டித்திடச்
சால வந்த சத்தியும் மாறுமே!

3. ஏலம் கிராம்பு எலுமிச்சம் பழவித்து
தோல் போக்கித் தூளித்துத் துணிந்து
நிரவிடு விடென்று விடைகொண் டேறுமன்றே!

4. நீடு மாமிளை நெற்பொரி சர்க்கரை
தேடு திப்பிலி தேனுடன் கொண்டிடப்
பீடை செய்யும் பெருஞ்சத்தி விக்கலும்
ஓட ஓடத் துரத்துவது உண்மையே!

5. பீலி சுட்டுக் குழைத்துடன் தூதுளை
நாலு காசுடன் தேனுடன் நக்கவே
பாலை வென்ற பணிமொழி மாதர்கள்
வாலி தானஞ் சத்திவிக்கலும் மாறுமே!

6. பொரித்த நெல்லுப் புடாலுடன் கூவளை
பருத்த கக்கு பயறுடன் காஞ்சோறி
பொருதருஞ் சொல்ல ஒட்டாம நிரம்பிரா
வருத்தமாஞ் சத்தி விக்கலும் மாறுமே!

7. அட்ட திப்பிலி அஞ்சனம் நெற்பொரி
கூட்டித் தேனில் கலந்துண்ண வல்லீரால்
இட்ட விக்க விடாது வந்திடும்
தொட்ட விண்ணொடு சூழவும் ஓடுமே!

8. சந்தனத் தோடு சர்க்கரையும் நெற்பொரி
அந்தனத் தோடி அமர்ந்த இலாமிச்சம்
வெந்தநீர்க் குழம்பு செய்து உண்டிட
நெஞ்சி மாது நிறைந்தஒக் காளமே

1. நவச்சாரம் கழஞ்சு 1
கையாந்தகரை கழஞ்சு 1

அரைத்து விழுங்க ஒக்காளமும், சத்தியும் நிற்கும்!

2. வாழைச் சருகு சட்டியிலிட்டுத், தண்ணீர் விட்டு, ஊறியபின், வடிகட்டிப் பனைவெல்லம் கரைத்துக் கொடுக்க, வெள்ளோக்காளமும், சத்தியும் நிற்கும்!

[பாட்டு]

1. பூசனி இலையும் பூவும்
பொரிந்திடும் சுக்கும் தேனும்
தாரணி மாதர் தங்கள்
தமனிய முலையின் பாலும்
வாரணி வண்டார் குழலாய்
... ... ...
வாராமல் விக்க லுக்குத்
தீண்டாவே நசியம் செய்யவும்!

## 32. சத்தி விக்கலுக்கு நசியம்

[பாட்டு]

நாக்கினைச் சுடும் நரக மிக்குணம்
சுக்கு திப்பிலி சுத்த மதுரமும்
துக்க நன்முலைப் பாலுடன் கூட்டியே
மூக்கில் வார்க்கில் முறிந்திடும் விக்கலே!

## 33. மேற்படிக்கு மருந்து

1. அமுக்கலா வேரும், சாரணை வேரும் சூரணித்துத் தேனில் கொள்ள, விக்கல் சத்தி தீரும்!

2. சுரையிலையை வாட்டிப் பிழிந்த சாற்றில், பணவெடை புனுகு கூட்டிக் கொடுக்க, விக்கல் நிற்கும்.

### 3. விக்கல் வகைக்கு மருந்து

கூவளை வேர் பலம் 48, தூணி நீர் விட்டு, நாழியாகக் காய்ச்சி வடித்துப் பனைவெல்லம் 24 கரைத்து 4 நாழிகை எரித்துச் சீரகம், கருஞ்சீரகம், ஏலம், லவங்கம், நாணத்தாது, கற்கடகச்சிங்சி, காயவிதைப் பருப்பு, வெள்ளைக் காக்கணம் விதை, திப்பிலி, பாகலிலைச் சாறு வார்த்தரைத்துக் கடலையளவு குளிகை செய்து, நிழலிலுணர்த்தித் தாழைவிழுது வாட்டிப் பிழிந்த சாற்றில் இரண்டு நேரமும் 120 குடம் தண்ணீர்விட்டுப் பின்பு இந்த மருந்து கொடுக்கவும்.

8 நாள் எருமைத் தயிருடன் பேயன்பழம், எலுமிச்சம்பழச் சாறுடனே பிசைந்து தலையில் தடவி, ஆமணக்கு இலை போட்டுக் கொடுக்கவும்.

இப்படித் தண்ணீர் வார்க்க மட்டும் கட்ட, சளிபிடித்தால், பின் பூவந்திப் பழமாவது, நெய்க்கொட்டான் பழமும் முலைப் பாலுமாவது நசியம் பண்ணவும்.

4. எலுமிச்சம்பழச் சாற்றில் 8 நாள் மிளகை ஊறவைத்துப் பொடிசெய்து, சரியெடை சீனி, நற்சீரகம், சூரணமும் கலந்து நெய், தேனிற் கொடுக்கவும்.

பத்தியம் - ஆவின்பால், நெய், மோர், பொன்னாங்கண்ணி, சிறுபயறு, நீர்ப்பூசனிக் காயாகும்.

### 33. மாந்தப் பித்தத்திற்கு எண்ணெய்

சிற்றாமணக்கு எண்ணெய்
நல்லெண்ணெய்
வகைக்கு உரி

ஆவின்பால்

எலுமிச்சம் பழச்சாறு

வகைக்குப் படி - 1

திருமஞ்சனத்திரவியம் பலம் 5

அரைத்துக் கரைத்து, மெழுகுப் பதத்தில் வடிந்து, நித்தந்தேய்த்து எலுமிச்சம் பழச்சாறுவிட்டு முழுகவும்.

## 34. பைத்தியத்திற்கு

மதுக்காரம் பழம் சீலையிலூட்டி, உலர்த்திக் கொண்டு, பைத்தியத்திற்கும், சறுக்கம் பித்தத்திற்கும், அறிவில்லாப் பித்தத் திற்கும் 4 விரற்கடை சீலை 2 நேரம் வெந்நீரில் பிழிந்து கொடுக்கவும்.

## 35. பைத்தியம் நில்லாத பேருக்கு

சிற்றாமுட்டி வேர்

பேராமுட்டிவேர்

கையாந்தகரைச்சாறு

பழுதும்பை

காவட்டம் புல்

பெருங்குறிஞ்சா

சீந்திற்கொடி

எருக்கம்வேர்

சங்கம்வேர்

கண்டங்கத்தரி

தூதுவளை

கழுதைமுள்ளி

பேய்மிரட்டி

வல்லாரை

ஊனாம்வேர்
நிலக்குமிழ்
நிலவிடா
தேற்றான்பட்டை
வட்டக்கிலுகிலுப்பை
தும்பை
பெருங்காஞ்சோறி
நண்டுநிணம்
வாரவச்சு (?)
கோரைக்கிழங்கு
இலுப்பைச்சாறு
நாவல்சருகு
உதியம்பட்டை
அரசம்பட்டை
ஆலம்பட்டை
மருதம்பட்டை
சிறுபுள்ளடி
சேப்பு
நெருஞ்சி
பேய்ப்பாகல்
பேய்ப்புடல்
பேய்த்தும்பை
பேய்ப்பீர்க்கு
பேய்க்குமட்டி
பேய்க்கரும்பு
தேற்றாம்பழம்

வகைக்கு பழம் 2 நறுக்கி, 8 மரக்கால் நீர்விட்டு, நாழியாகக் காய்ச்சி, 3 ஆகப் பகிர்ந்து, 2 தரம் கொண்டு, 3 ஆம் தரம் குடித்தவுடனே, சோறுதின்னவிட்டு

கையுமாரங்கட்டி (?)
மஞ்சள்
வசம்பு
தேற்றான்பழம்

சமன்கூட்டி அரைத்து, வெந்நீரில் கொடுக்கவும்; பயித்தியம் எடுக்கும்.

வேப்படி நாக்கு அரிசி கூடப் போட்டுத் தீட்டிக் கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். முச்சசெவித்தாழை (?) இடித்து நீரிற் பிசைந்து கொடுக்கவும்.

### 36. நீரிழிவுக்கு மருந்து

ஆவாரை
அத்தி
நாவல்

இவற்றின் தளிரை மோரிலரைத்துக் கலக்கிச் சாப்பிடத் தீரும்!

### 37. பிரமியத்திற்கு

அல்லிப்பூ
வட்டத்துத்திவேர்
நீர்ப்பூலாம் வேர்ப்பட்டை
சிந்தித்துண்டு
கற்றாழைவேர்

இவைகளை இடித்துச் சாறுவாங்கி, அதில் சர்க்கரை ஏலம் சூரணித்துச் சாப்பிடத் தீரும்!

## 38. நீரிழிவிற்கு

1. ஆவாரை

   கொன்றை

   நாவல்

   பூவரசு

   அத்தி

   மருது

இவற்றின் சாம்பலைத் தேனிற் குழைத்துண்ணத் தீரும்!

2. ஆவிரை இலை, பூ, வேர், குச்சி விதை இவைகளைச் சுட்ட சாம்பலைத் தேனில் உண்ணத் தீரும்!



பின்னிணைப்பு : 1

## மருத்துவக் கலைச் சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | குராசானியோமம் | — | Black henbane; த ஓமச்செடி |
| 2. | பவுத்திரம் | — | Fistula |
| 3. | வஸ்திரகாயம் | — | துணியில் சலித்தல் |
| 4. | புகையூரல் | — | ஒட்டடை |
| 5. | குன்றிமணி | — | Abrus precatorius |
| 6. | வசம்பு | — | Acorus calamus |
| 7. | சதகுப்பை | — | Awethum sowa |
| 8. | பூர்ஜபத்திரம் | — | Betula utillis |
| 9. | பனைமரம் | — | Borassus flabollifer |
| 10. | சரக்கொன்றை | — | Cassic fistula |
| 11. | கோரக்கர் மூலி | — | Cuannbis sativa |
| 12. | கருந்துளசி | — | Ocimum sanctum |
| 13. | 1 gram | = | 1/60 ounce |
| 14. | 1 தூணி | = | 8 படி |
| 15. | 1 குறுணி | = | 4 படி |
| 16. | 1 gram | — | 15.432 grains |



